# முகவுரை

உயர்ந்தோர் தொழுவிளங்கும் தன்னேரிலாத தமிழ் மொழியானது, தனது ஒப்புயர்வற்ற மொழிமதுகையான், பலாயிரமாண்டுகட்குமுன்னரே, தமிழ்மக்களை மிகவுயரிய நிலையில் அமரச்செய்தது. அஞ்ஞான்று அஃது இயல், இசை, நாடகமெனும் முத்தமிழ்த் துறைபோகிய இலக்கிய இலக்கணங்களுடன் திகழ்ந்தது. இடைப்பட்ட காலத்து, பிறநாட்டினரின் தொடர்பாலும், கொடுமைகளாலும், போற்றுவார் இன்மையாலும், தமிழ்வளங் குறையத் தலைப்பட்டது. இடுக்கண் எய்தி மகிழ்ச்சி குன்றிய மக்களின் வாழ்வில், இசை நாடகமாதிய கவின்கலைகள் இடம் பெற அரிதாகி மறைந்து வழக்காறற்றன.

பின்னர் நமது நாட்டினர், ஆங்கில ஆட்சியின் பயனால், நாட்டின் அமைதியும், உடைமைப்பாதுகாவலும், பிறநலங்களும் எய்தி, வறுமை நீங்கி மகிழ்ச்சியின் எல்லைகண்டனர்; தம்மொழி, 'முத்தமிழ்' எனும் பெற்றிமை உடையதாயிற்றேயெனக் கருதினர்; இசைத்தமிழும், நாடகத்தமிழும் வழக்கற்றிருப்பதை யுணர்ந்தனர்; பழந்தமிழ் இலக்கியங்களை ஆராயவும், அவற்றின் சிறப்பினை வெளியிடவும் தலைப்பட்டனர். இசைத்துறையில் தஞ்சை **இராவ்சாகிப் மு. ஆபிரகாம் பண்டிதர்** அவர்கள் பெரிதும் முயன்று

'கருணாமிர்த சாகரம்' எனும் இசைத்தமிழ்நூலின் முற் பகுதியை வெளியிட்டனர். இதுபோழ்து ஈழநாட்டுப் பேரறிஞர் உயர்திரு. சுவாமி விபுலானந்த அடிகளும், திரு வனந்தபுரம் இசைத்தமிழ்ச் செல்வர் திரு. தி. இலக்கு மணப்பிள்ளையவர்களும் இசைத்தமிழ்த்துறையில் அறிஞர் கள் போற்றுதற்குரிய அரும்பணிபுரிந்து வருகின்றனர். தமிழன்பர்கள், இவ்விரு பெருமக்களின் நன்முயற்சியால் விளையும் பெரும்பயன்களை நன்குணர்ந்து, நன்றியுடன் போற்றி இசைத்தமிழை வளம்பெறச் செய்துகொள்ளும் கடப்பாடுடையர்.

தமிழ்நாட்டின் நாடகமோ, தன் பண்டைச்சிறப்புகள் அனைத்தையும் இழந்து, மிகுந்த இழிநிலையை இப் போது எய்தி இருக்கின்றது. சின்னாட்களின் முன்னர், புராணக்கதைகளைத் தழுவி, இராகம், தாளம், மெய்ப்பாடு கள் தோன்றக் கல்வியும் ஒழுக்கமும் நிரம்பாத கூத்தாடிகள் எனும் வகுப்பினரால் தெருக்கூத்துகள் நிகழ்த்தப்பெற்று வந்தன. 'பள்ளு' என்ற நாடகமும் நடைபெறுவதுண்டு. காலப்போக்கில் ஆங்கில நாடகங்களின் நடையைத் தழுவி நாடக அங்கங்கள் அமைத்து, காட்சிகளின் சிறப்பைப் பெருக்கி, காலத்துக்கும் இடத்துக்கும் ஒவ்வாத ஆடை அணிகளாலும், பாடல்களாலும் அழகுசெய்ய முயன்று, தமிழ் மரபிற்கொவ்வாத பொய்க்கதைகளை யாவரும் நடிக் கத்தலைப்பட்டு இதுபோது தமிழ்நாடகங்களை இழிநிலையின் கீழ்எல்லைக்குக் கொணர்ந்து விட்டனர். தமிழ்நாட்டு அரங்கமேடைகளினும், ஒளிஒலியக் காட்சிகளினும், இக் கூறிய கீழ்த்தரத்த வரலாறுகளே காணக்கிடப்பதால்,

தமிழ்நாட்டு நாகரிகத்தின் தனிச்சிறப்புக்களை எதிர்காலத்தில் நினைப்பவரும் இலராய் அழிந்து வதம்படும் என்பதை அறிஞர் பலரும் உளங்கொள்வார்களாக.

நமது நாட்டினர், கூத்தநூல், குணநூல், மதிவாணர் நாடகத் தமிழ்நூல், பரதம், சயந்தம், எனும் நாடகநூல்களின் பெயரைக்கேட்டு அவற்றிற்கு ஏங்கி நிற்கும்போது தமிழ்முறை தழுவிச் சொன்னயம் பொருணயம் மிளிர அகவற்பாவினால் திரு. திருவனந்தபுரம் பேராசிரியர் இராவ்பகதூர் P. சுந்தரம்பிள்ளையவர்கள் "மனோன்மணீயம்" எனும் நாடக நூலை வெளியிட்டனர். பின்பு தஞ்சை திரு. C. S. முத்துசாமி ஐயர் அவர்கள் 'விசுவனாதம்' எனும் நூலையும், தமிழ்ப்பெரும்புலவர் திரு. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் "மான விஜயம்" எனும் நூலையும் தமிழ்ப்புலவர் அ. நடராச பிள்ளையவர்கள் "புகழேந்தி" எனும் நூலையும், வடுவூர் திரு. கோ. துரைசாமி ஐயங்கார் அவர்கள் 'திலோத்தமை' என்ற நூலையும் இயற்றித் தமிழுலகிற்கு உதவியுள்ளனர். இவையன்றி ஆங்கிலம், வடமொழி முதலாய பிறமொழிகளினின்றும் பெயர்க்கப்பட்ட நாடகநூல்களும் பலவுள. அவற்றுள் பல்லாவரம் புலவர்பெருமான் உயர் திரு. மறைமலையடிகளாரது 'சாகுந்தலமும்', திரு. பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியார் அவர்களது 'மண்ணியல் சிறுதேரும்', திரு. கண்ணபிரான் பிள்ளையவர்களது 'வேனிசுவர்த்தகனும்' சிறப்புடையன.

உரைநடை நாடக நூல்கள் தமிழில் பல அறிஞர்களால் இயற்றப்பெற்றிருப்பினும் திரு. வி. கோ. சூரிய

நாராயண சாஸ்திரியார், நாகை சி. கோபாலகிருஷ்ணபிள்ளை, இராவ்பகதூர் P. சம்பந்த முதலியார், பார்த்தசாரதி ஐயங்கார் ஆகிய சில பெரியாரது நூல்களே ஏற்றமாகப் பேசப்படுகின்றன. நாடகப் பேராசிரியர்கள் இயற்றிய நாடக நூல்களிற்காணும் சிறந்த பண்புகள் அனைத்தும் இவற்றில் அமைந்துள்ளனவென்று கூறமுடியாது. எனினும் சில அறிஞர் தமிழ்ச்சுவை ததும்ப, மொழிவளஞ் சுரக்க, புதிய கருத்துக்கள் ஒளிர, உணர்ச்சி ஊற்றெடுத்துப்பாய, நாடக இலக்கியங்களை இயற்றத் தலைப்பட்டது நமது நாட்டின் நற்றவப்பேறேயாகும். இப்போது திருவாளர் K. கோதண்டபாணி பிள்ளையவர்களால் எழுதப்பெற்று வெளிவந்துள்ள 'பங்கயச்செல்வி' என்ற உண்மைவரலாறு தழுவிய இந் நாடக நூல், அறிஞர்கள் மதித்தற்குரிய சிறந்த உரை நடை நாடக நூல்களுள் ஒன்று என்பது தேற்றம். இது தேனொழுக்குப் போன்ற நடையினதாய்ப் படிப்பவருளத்தைப் பிணிக்கும் பெற்றியதாய் அரசியற் சூழ்ச்சி, ஆண்மையின் சிறப்பு, ஈனரின் இழிவு, உண்மையின் உயர்வு, கற்பின் திறம், வீரத்தின் சிறப்பு ஆகிய இன்ன பல கருத்துக்களால் மாண்புற்று விளங்குகின்றது.

ஆசிரியர் இந்நூலில் ஆங்காங்கு செந்தமிழ்ச் செல்வங்களாகிய பேரிலக்கியங்களின் கருத்துக்களையும், சொற்றொடர்களையும் செவ்வனே ஆண்டிருப்பது போற்றத்தகும் சிறப்பாகும். நாடக உறுப்பினர்கள் பலதரத்தனராயிருத்தலால், துறவி, பணியாளர், வெறியாட்டயர்வார் முதலியவர்கள் பேச்சில் அவரவர்களுக்கேற்ப உரைநடைஅமையச் செய்திருப்பதும் வேற்று மொழியினர் சில விடங்களில்

வரும்போது அவை பவர்களின் மொழிபிரைவ, அவர்களைப் பேசச்செய்திருப்பதும் ஈண்டுக் குறிக்கத்தக்கன.

இந்நாடகம், சிறந்த இலக்கணமுடையதாய், உயரிய கருத்துக்கள் மலிந்து, சிலப்பதிகாரத்தாற் 'கண்ணகி' யின் திறம் உலகிற்கு அறிவுறுத்தப்பெற்றதுபோல் பாண்டிமா தேவியின் கற்பிற்சிறந்த செல்வமகளாம் 'பங்கயச்செல்வி' யும் நமது நாட்டிடைத் திகழ்வதை அறிவுறுத்தவே எழுந் தது. இந்நூல், பொருள் செறிந்த அழகிய உரை நடைத் தொடர்களால். வீரச்சுவை பொங்கித்ததும்ப, மெய்ப்பாடு கள் விளங்க, நடித்தற்கும் படித்தற்கும் ஏற்றவாறு, இயற் றப்பெற்றிருப்பது போற்றுதற்குரியதாம். இந்நூலாசிரியர் திரு. கோதண்டபாணி பிள்ளையவர்கள் தமது பெரிய உத்தி யோக அலுவலுக்கிடையில் தமிழபிமானத்தால் இத்தகைய முயற்சியை மேற்கொண்டது, தமிழ்ப்புலவர்களாற் பெரி தும் மதித்தற்குரியதாகும். ஆசிரியர் பிள்ளையவர்கள், உயரிய குறிக்கோளுடன் இன்னும் பல நூல்களியற்றித் தமிழன்னையைச் சிறப்பிக்கவேண்டி நீடிய வாணாளும், நிறைந்த பன்னலங்களும் பெற்று வாழுமாறு தமிழ்த் தாயை மனதார இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்,

**த. மா. உமாமகேசுவரன்.**

கரந்தைத்தமிழ்ச்சங்கம்,
தஞ்சை.
11—4—36.

# முன்னுரை.

தென்தமிழ்நாட்டில் பதினாறாவது நூற்றாண்டின் இடைப்பகுதியில் நிகழ்ந்தனவாய நிகழ்ச்சிகளையும், ஆராய்ச்சியால் கண்டவற்றையும், கதைச்சுவை பொருந்தப்புனைந்து தொகுத்து, இந் நாடக நூல் அமைக்கப்பெற்றுளது. இந்நூல், நாட்டின் சரிதம் தழுவிய நாடகநூல் எனத்தகும்.

இது நாடக வகைகளில், அச்சுறுத்தி அறிவு கொளுத்தும் (Tragedy) ட்ராஜிடி என்ற கொலைக் கூத்தின்பாற்படும். ஏனைய நாடகம்போன்று இதிற் களமும், காட்சியும் வகுக்கப்பட்டில. களம் வகுத்தல் என்பது பண்டைய நாடகமேடையின் தன்மைகருதி எழுந்ததோர் பாகுபாடாகும். இக்கால நாடக மேடையின் தகுதியைக் கருதுங்கால் இப்பாகுபாடு வேண்டியதின்று என்பர் நாடக நூல்வலார். இளங் கோவடிகள் தம் காப்பியத்திற்குக் காதைகள் வகுத் தாங்கு இந்நூலினை இருபான் பகுதிகளாக வகுத் தமை தமிழ் முறை என்க.

கதை நிகழ்ச்சி, (dramatic action) ஒவ்வோர் பகுதியினும், ஒன்றினை ஒன்று பற்றும் தொடர் புடையது. கதையின் போக்கு, முடிவறியும் வேட்

கையை மேன்மேல் மிகுத்திடும் வளர்ச்சியை முற்றும் பெற்றுளது. இதனுள் நாடகச்சுவைகள் யாவும் நயம்பெற அமைந்துள்ளன. அவற்றுள் அவலச் சுவையே மிகுந்திருப்பினும் அதனால்வருந் துயர் தணிப்ப இடையிடையே நகைச்சுவையும் இயற்கை யழகினை இயம்பிடும் பகுதியும் ஏற்றபெற்றி பகுத் தமைக்கப்பெற்றுள்ளன. அன்றியும் நாடகமாந்தர் தம் உளத்தின்பாங்கும், அவர்தம் ஆற்றலும், அறிவும், தாழ்வும், உயர்வும், அவர்தம் மொழியா லும் செய்திறனும் நன்கு புலப்படுமாறும், உளத் தின்கண் நிகழும் பற்பல நிகழ்ச்சிகளும் அவற்றின் தோற்றம், வளர்ச்சி அழிவு முதலியனவும் நன்கு விளங்குமாறும் இதனுட் காணலாம்.

இந்நூலின் உரைநடை நாடகநூலுக்கேற்பச் செம்பாகமாக இனிமைபொருந்த அமைந்துள்ளது. நாடக மக்களின் உயர்வு, தாழ்வு, அறிவின் தேர்ச்சி இவற்றிற்கேற்ப அவர்தம் மொழிநடை பொருந்தி யுள்ளது.

இச்சிறு நூலினைக் கலைமகள் சிலம்பின் ஒரு சிறு பரல் எனத் தமிழகம் கொள்க.

கலைமகள் நிலையம்.

# உள்ளுறை



என-இருபதின் திறமாய் இயலுமிந் நாடகம்.

# நாடக மாந்தர்

| | |
|---|---|
| பாண்டிமாதேவி | பாண்டியன் மனைவி |
| பங்கயச்செல்வி | பாண்டியன் மகள் |
| கண்ணன்மாறனார் | தானைத்தலைவன் |
| வல்லபன் | கண்ணன்மாறனார் மகன் |
| அங்கயற்கண்ணி | கண்ணன்மாறனார் மனைவி |
| இளங்கோ | சோழன் மகன் |
| கிருஷ்ணதேவராயர் | விஜயநகரத்தரையன் |
| நாகனார் | விஜயநகரத்தரையன் படைத்தலைவன் |
| விஸ்வநாதன் | நாகனார் மகன் |
| கண்ணகி | பணிப் பெண் |

சிறுபடைத்தலைவன்

சிற்றரசர்கள்

காவலாளர் முதலியோர்

ஸ்ரீ

# பங்கயச்செல்வி

அல்லது

## வீரக்காதல்

## படைவளம் படுத்திய பாண்டியன் செயல்

### I

[திண்டிக்கோட்டை; மாலை; பல சிற்றரசர்களுக்
கிடையில் பாண்டியன் வீற்றிருக்கிறான்]

பாண்டியன் :—அன்பிற்குரிய அரசர்காள்! நண்பிற்சிறந்த அன்பர்காள்! அனைவர் வரவும் நல்வரவாகுக. இந்நாட்டினைச் சூழ்தரு இருள் அகன்றது; அகன்றது துன்பமெல்லாம். நம் தொல்புகழ், மஞ்சினால் மறையுண்ட மதிபோல் தோல்வியாஞ் சின்னாள் மறைந்தது. அதனை மீண்டும் நமக்களித்தவர் ஈண்டெய்திய நண்பர். [விஜய நகரத்தரையன் படைத்தலைவனான நாகனாரைக் குறிக்கிறான்.] உற்ற துணையென இவரை அனுப்பிய உயர் பேரரசர் நன்றி, நாமும் நம் நாடும் பன்முறையும் போற்றும் பான்மையது. அன்னார் சொல்வழி நின்று உண்மையின் உதவிய இந்நண்பர் தாம் செய்நன்றியும் நம்மால் மறக்கற்பாலதோ? இவரது போர்செய் வன்மையும் அஞ்சா ஆண்மையும் நாம் கண்டு களித்தோம்.

இவர் போர்த்திறம், நாமும் நம் படைவீரர்களும் பின் பற்றத் தக்கதே. விஜயநகரத்தரையன் வெற்றிகள் யாவும் இவரால் விளைந்தன வன்றோ?

[நாகனாரை நோக்கி]

வெற்றி வீர! என்றும் மறவோம் நுந்தம் எண்ணரும் உதவியை. இவ்வுதவிக்குக் கைம்மாறாக ஆனையூர் நாட்டில் ஐந்திலொரு பகுதியை உம்மதாய் அளித்தோம். இதனை உவந்து நீர் ஏற்பீராக.

நாகனார்:—நான் இவ்விடம் பொருள் சம்பாதிப்பதற்கோ, பூமி சேர்ப்பதற்கோ, வந்தவனல்லன்; அரசர்க்குழைப்பதே என் கடன்; என்னை இவ்விடம் அனுப்பியவர் விஜயநகர வேந்தர்; அவர் பணியாள் நான். அவர் உத்தரவின்றி எதையும் பெறுதற்கு எனக்கு உரிமையில்லை. தாங்கள் அன்பின் மிகுதியால் எனக்களித்த நன்கொடைக்கு நான் என்றும் நன்றி பாராட்டுவேன்; விஜயநகரத்தரசர் அனுமதியின்றி இவ்வெகுமதியை ஏற்றுக்கொள்ள முடியாததற்கு யான் மிகவும் வருந்துகிறேன்; என்னை மன்னிக்கும்படி வேண்டிக் கொள்கிறேன்.

பாண்டியன்:—நன்று! நன்று!! இந்நாட்டினை அப்பேரரசரைக் கொண்டே அளிக்குமாறு செய்வேன்; வேறொன்று யான் வேண்டுவதுளது; இந்நாட்டின் படை நன்கு படையிலக்கணம் பெற்றிலது; நீர் இங்கு உறையும் நாட்களில் இப்படையினைச் செம்மைபெற அமைப்பீராக; எம் படையினரைப் பாங்குறப் பயில்விப்பது

உம் கடன். பழிபடா வகையில் நீர் இப் பாரம் தாங்குவீராக.

நாகனூர்:—அரசரிட்ட கட்டளைப்படி செய்வதே என் கடன். அரசரிட்ட வேலையை மறுக்க எனக்கு அதிகார முளதோ? நாளையே இவ் வேலையைத் தொடங்குவேன்; ஆயினும் படைவளம் படுத்துதல் படைத்தலைவருக்கன்றி மற்று ஒருவருக்கும் பொருந்தாது. இதன் காரணம் நான் சொல்ல வேண்டியதில்லை; எல்லோருக்கும் தெரிந்ததே; படைத்தலைமை எனக்குக் கொடுத்தாலன்றி என்னால் இது ஏற்றுக்கொள்ளத் தக்கதில்லை.

பாண்டியன்:—நீர் சொல்லியது முற்றிலும் விளங்கவில்லை; ஆயினும் எம்படையினை வளம்பெற அமைக்கும்வரை படைத்தலைமை உமக்கு இன்றே அளித்தேன். படையாளர் யாவரும் உம் சொற்படி நடப்பர். நடவாரேல் அவரைத் தக்கவாறு தண்டிக்கும் உரிமையும் பெற்றீர். நாம் இல்லாவிடத்துப் படைஞர் உம் ஆணையை எம் ஆணையாய்க்கொள்வர்.

[சிற்றரசர்களை நோக்கி]

அன்பிற் சிறந்த அரசர்காள்! நான் உம்பால் கூறுவது ஒன்றுண்டு. சோழன் தோல்வியுற்றான் என வாளாவிருத்தல் தவறு. வெற்றியே நினைந்து, நாளும் வீணராக வாழ்வீரேல் உற்றதும் அகன்றிடும்; உயர்வும் குன்றிடும்; இதுவே நம் படைத்திறம் சிறக்கச்செய்ய ஏற்ற காலம். பாண்டியன் படை பண்புற்றிலது என்

பதை அறிவீர். பாண்டியன் படைஞர் ஆற்றலும் இழந்தார்; பயிற்சியும் பெற்றிலர்; அவர் தம் தொகையும் குறைந்தது. படைதிரட்டும் முறையே முற்றிலும் தவறாக அமைந்துளது. சிற்றரசர் ஒவ்வொருவரும் ஒரு சிறு படையைக் கொண்டுள்ளார். போர் நிகழ்ந்துழிப்பேரரசர், இச்சிறு படைகளைச் சேர்த்துப் பெரும்படை திரட்டிப் போர்க்கெழுமுறை பெருங் குறைவுடையது; அப்படையுறு படைஞர்கள், ஒரே தலைவரால் பயற்சி பெற்றிலர்; போர்முறை ஒரே வகையிற் பயின்றுமிலர்; வீரர் யாவரும் ஒரே முறையில் பயில்தலே வெற்றிக்கு அடிப்படை; ஒரு முறையிலேயே பயின்றிலார், முரணுது ஒத்துப்போர்புரிவதெங்ஙனம்? யான் கருதிய திருத்தம், போர்க்காலத்துமாத்திரமன்றி எப்பொழுதுமே பேரரசனிடம் படைஞர் யாவரும் நிலையாக இருத்தல் வேண்டும்; படைப் பயற்சி பலநாள்பழகுதல்வேண்டும்; தினமும் பழகுதல் திடம்பெறச் செய்யும்; ஒரு முறையில் பழகுதலையும் ஒத்துப் போர்புரிதலையும் ஆழ்ந்து கருதியே யான் இதனை மேற்கொண்டேன். சிற்றரசரிற் சிலர் வேண்டிய அளவு படைஞரைப் போற்றிஞரிலர். சிற்றரசர் பாலுள்ள சிறு படைகளைப் பேரரசர்வயின் அனுப்பு வதோடு படைஞர் தொகை குறைந்தவிடத்து அதற்குரிய சிற்றரசர்கள் குறைந்துள படைஞர்களை நிரப்புதற்குப் பொருளுதவி புரிவாராக. யானே போர் செய்ய வல்லோரைத் தெரிந்தெடுத்துப் படைத் தொழில் கற்குமாறுசெய்வேன்; படையின் உதவியைச்

சிற்றரசர் வேண்டியபோது வேண்டிய அளவில் தடையின்றி அனுப்ப இயைந்துளேன்; இவை யாவர்க்கும் பொருத்தமுடையனவென யான் கருதுவேன். இதற்கு மாறாயின உண்டெனின் உரைப்பீராக.

ஓர் சிற்றரசர் :— [எழுந்து] அரசே! புதிய கொள்கையும், புதிய வழக்கமும் புகழெனக்கொண்டீர்; இவை முற்றிலும் தவறெனக் கொண்டுளேன். அயலார் தம் நட்புக் கொண்டது ஆபத்துக்கிடமலால் வேறில்லை.

* "தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்."

சோழன், பாண்டியனை வென்ற நாள் உள. பாண்டியன் சோழனை வென்ற நாளும் பல. ஓர் தோல்விக்கு ஆற்றாது அயலார் நட்புக்கோடலோ அரசியல் வளப்பம். பழமை கருதிலீர்; பழைய உறவெனத் தள்ளத் தகுமோ, அயலார் உறவு ஆயிரம் ஆயினும் பழைய உறவின் பண்பினைப் பெறுமோ? "பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல்" பயனற்றதன்று; படையினைத் திருத்த முயன்றதும் பண்பெனப்படுமோ? நட்புக் கோடற்கு முன்பே இதனைச் செய்தோமெனில் நன்றெனக்கொள்வேன். யாருடன் எண்ணி இந்தநட்புக் கொண்டீரோ! ஆராய்ந்துகொள்ளா அயலார் நட்புந் தீராத்துயரம் தரும். அரசே தங்கள் செயலால் இந் நாட்டின் நலந்தரு திரு நீங்கிற்றென்பேன்.

பாண்டியன்:—நகைத்தற் பொருட்டோ நான் நட்புக்கொண்டது? நட்டார் அறிவர் நட்பின்திறம். அயலார் எம்

* திருக்—தெரிந்து—8.

நணம் அதனை அறிதல் தரும்? உண்ணார் அறிவரோ உணவின் சுவை? பன்முறை ஆய்ந்து பல்லாற்றானும் எண்ணியே இந்நட்புக் கொண்டேன். புதியதோர் நட்புக்கோடலை உம்முடன் எண்ணித் துணிதற்குப் போதிய காலமிலதாயிற்று. மறுமுறையும் சோழன் நம் நாட்டில் படையுடன்புகுந்து நம்மரசிளங்குமரியைக் கவர்ந்துசெல்லக் கருதியதாக ஒற்றர்களால் அறிந் தேன். ஆதலின் காலம் தாழ்க்காது நட்புக்கோடலே நலமெனக் கொண்டேன். யான் கருதியவாறே அந் நண்பரால் வெற்றியும் பெற்றேன். வெற்றிதந்த ஓர் நண்பரை வெறுப்பதும் தகுமோ? விருப்பு அன்றியும் வெறுப்பு இன்றியும் விழுமியது கருதுவீர்.

மற்றொரு சிற்றரசன்:—படைத் தலைமை அயலானுக் கீந்தது தக்கதாகுமோ? அறம் பொருள் இன்பம் உயிரச்சம் என்னும் இந்நான்கினும் தேர்ந்தபினன்றோ இவனைத் தானைத்தலைவனுக்குவது தக்கதாகும். தலைவன் எவ்வழி படையும்அவ்வழி. ஜீவகன் தந்தைசெய்தியை நினைவீர். நன்று நம் வீரம்! நன்று நம் படைத்தொழில்! நன்று நம் அரசர் செயல்! இந்நாடு தக்கோர் அற்றதாயிற்று. பண்டையோர் புகழில் எஞ்சியுளது கொஞ்சமே. அதனையும் இழந்தோம் நம்மரசர் செயலால்.

மற்றொரு சிற்றரசன்:—நாம் இனி, படைகள்போற்றுதல்வேண் டியதிலதாம். இதன் உட்பொதி கருத்தென்னவோ? உற்று நோக்குவீர். நம்மிடமுள்ள சிறு படையும் இழந்த பின், நம்பால் எஞ்சிய ஆண்மையும் அழியும்; நம்மை

அயலார் தாக்கின் நாம் அரசரிடம் சென்று பெரும் படை நல்க இரந்துநிற்க வேண்டும். அப்படை எய்து முன் நம்மூர் தீக்கிரையாகுமோ? கொள்ளை கொளப் படுமோ? அறியோம். இச்சிறுபடை கருதியாயினும் போர்த்தொழில் பயில்கின்றோம். அஃதுமிலதேல் போர்த்தொழில் மறந்து, மனைவிமார் பணிகள் மாறு தியற்றி, உண்டும் உடுத்தியும் உறங்கியும் கழிவோம்; இதனால் தீமையேயன்றி வேறோர் நன்மையும் கண்டி லேம்; போர்த்திறம் வல்லீர்! இந்நாட்டின் நன்மையே கருதுவீராகில் அரசன் கருதினை தவிர்க்க வேண்டுவீர். புதுப்படை சேர்க்கும் புதுமையை என் சொல்வேன். வழிவழி வந்த படையன்றோ வல்லமை பெற்றது. தொல்படை யல்லாப்படையெலாம் தொலையுமன்றோ! கூலி ஆட்களோ போரில் வெல்பவர்! இது எலிகளாற் படை சேர்ப்பதை ஒக்கும்! சிறுமை நினைப்பவர், வறுமையடைந்தவர், கூலிவிழைந்தவர் இவர்கள்போரில் சிறப்பரோ? நாடெனும் அன்பும், நலஞ்செய் கருத் தும், நம்பும் தகைமையும், நற்குணமுமிலாரைப் படை யிற் கொள்ளுதல் பழிப்புக்கிடமே, மாறனூர் பால் எக்குறை கண்டீர்? தானைத் தலைமையினின்று அவரை நீக்கியது ஏற்குமோ? தெளிந்தான்கண் ஐயுறல் தீரா இடும்பை தருமன்றோ!

பாண்டியன்:—ஆறுவீர் சினம். சிற்றரசர்களின் பெருமை யையும், வலிமையையும் குறைப்பதுகருதி யான் இவை குறித்திலேன். வேண்டுமாயின் பயிற்சியின் பின் ஓவ்

வொருவரும் முன்போன்றே சிறு படை கொள்வீர். மூலப்படையென அதனைக்கொள்வேன். உதவிப்படை ஒன்று சேர்க்க உதவுவீர். இதற்கு யாவரும் இணங்கு வீரெனக் கருதுகின்றேன். அன்றெனில் கூறுவீர். மற்றுமோர் உறுதி கூறுவேன். ஈதெலாம் என்னலம் கருதியதன்று என்பதை நீர் நன்கு உணர்வீராக; பகைவராலும்பிறவற்றாலும்வரும் பகைப்பிணிநீக்குதல் பாரினை ஆளும் பார்த்திபர் கடனன்றோ. வையம் இன்புறினன்றோ மன்னன் இன்புறும். இந்நாட்டினை நலம்பெறச்செய்து நமதுகுடிகளை இன்புறச்செய்தலே என் துணிபு. நாள்தோறும் நாடி நல்லவைசெய்தலே என்கருத்து. தானைத்தலைமையையான்மாற்றியதையுங் குறித்தீர். அதனால் யாது தீதாம்? ஜீவகன் தந்தை உற்றதையும் உணர்வேன். பெண்ணின் இன்பம் பெரி தெனத் தாழ்ந்தேன் எனவோ அயிர்த்தீர். அங்ஙனம் அன்று அன்று; சின்னாளுக்கே அவற்குத் தலைமை ஈந் துளேன். சற்று முன் நாம் வெற்றியுற்றது யார் தலை மையின்கீழ்? நம்மை நம்பும் தன்மை, நாம் தரவருவது; அயலாரென்ன அயிர்ப்பீராயின் அன்னார் நம்மை அயிர்ப்பதற்கு அரைக்கணமாகுமோ! படைத்தலை மையை அயலார்க்கீந்தது, கண்ணன்மாறனார் திறமை யின் குறைகண்டன்று, கண்ணன்மாறனார் போர் நடத்திய பான்மையும் புகழ்ளிப்பதே; நமது படை போர்க்கும் புதுமுறைப் பயிற்சி புகட்டுதற்கென்றே இவ்வாறு துணிந்தேன்.

[கண்ணன்மாறனை நோக்கி] ஐய! இந்து உம் தறுகண் ஆண்மைக்குத் தாழ்வு தருவதன்று. அன்ப! இப்படை பாங்குற அமைந்தபின் மீண்டும் நீரே தானைத்தலைமை தாங்குவீர் என்பதில் தடை சிறிதுமின்று; அதுவரை நீர் எம்மைக் காப்பாளர் தலைவராயிருப்பீர்.

கண்ணன் மாறனார்:—எனக்கெனும் எண்ணமில்லேன். எப் பணியாயினும் அரசர் வழி நிற்றலே என் கடன்.

ஓர் சிற்றரசன்:—அருமைசால் அரசே! யான் கூறுவதொன் றுண்டு. அஃது தக்கதாயினும் தகாததாயினும் முனி வின்றிக் கேட்கவேண்டுவன். பகையைப் பகையால் வென்றமை யாண்டும் கண்டிலோம். பகைக்கப் பகைக் கப் பகையே மிகுந்திடும். அன்பின்வெற்றியே அழியா வெற்றி; வேற்றுமையகற்றி ஒற்றுமை காண்டலே பெரியார் செய்கை. நம்முடன் பகைத்தவர், நம் தொல் குடி நண்பரே; பொறுமையில்லார்க்குப் பொறுமை காட்டி, அன்பில்லார்க்கு அன்பது காட்டி, அன்பால் அவரை வெல்வோமாகில், அழியா மேன்மையை அடைந்தோமாவோம். சோழனும் பாண்டியனும் ஒன் றுயின் இவரை வெல்வார் உளரோ? உட்பகை அகற்றி ஒற்றுமைகொள்ளப்பன்முறைவேண்டுகிறேன். எம்மிள வரசியைச் சோழன் இளவரசற்கு அளிப்பதேயாயின் ஒற்றுமை முற்றுற அமையும். அரசர் இதற்கு ஏய்வதாயின் யானேசென்று மணம்பேசி மீள்குவேன்.

பாண்டியன் :—நண்ப! இவர் கூறியது நகைத்தற்குரிய தன்றி நயத்தற்பாலதோ! யானோ சென்று ஒற்றுமை இரப்பேன்! வல்லமையற்ற வறியோனன்றோ வலியக்

சென்று வாழ்வுற வேண்டுவன். படைஞரற்றதோ பாண்டியன்நாடு. வல்லமை என்பது வளவன் கொண்டதோ? நீர் மணம் கூறியது என் மனதைப்புண்படுத்தும். அவ்வற்பனோ நம் மகளைக் கொளத்தக்கவன்? மணவினையைக்குறித்து நீர் கூறியது இவ்வவையின்கண் கூறத்தக்கதொன்றன்று. போர்வினை திருத்தப்புகுந்த நாம், மணவினை கருதலோ தக்கது? மணம் முடிப்பது என் கடன். என் கடன் இயற்றுமாறு, யான் அறிந்துளேன். இதனைக் கருதுதற்கும் நீர் உரியர் அல்லீர்.

சிற்றரசன்:—எங்ஙனம் உரியனல்லன் என்பதைத் தெரிந்திலேன்? அரசர்க்கு ஆண்மகவு இலையாதலால் இந்நாட்டினை இளவரசியே ஆள நேரும். இளவரசியை அயலாற்கீந்து, அயலானை எமக்கு அரசனாக்கவோ நினைத்தீர்? நன்று! நன்றிது! யான் இதனைக் கருதவும் உரியனல்லன்! படை உதவவே உரியேன். ஆம்; ஆம்.

பாண்டியன்:—குறுக்கே கூறுதலைத் தவிர்வீர். ஒன்றை முடிக்குமுன் கூறுதல் முற்றாத அறிவினைஉணர்த்தும்; இருப்பீர் சற்று அமைதியாய்; இல்லையேற் போவீர் அப்பால். அரசர்காள்! யான் கூறியன ஆழ்ந்து கருதுவீர். படையிலா நாடு பாழ் பட்டழியும் * "பொன்னினாகும் பொருபடை யப்படை, தன்னினாகும் தரணி" ஒற்றுமையுற்று ஒரேவழியேகக் கருதுவீர். தனித்தனி பேசுதல் தவறுடைத்தென்பர். ஒற்றுமையில்லா நாடு ஒருவழிப்படுமோ? ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு; பல இனிப் பகர்வதேன்? யான் கூறியன பன்முறை எண்ணுவீர். நீர் எண்ணி ஏய்ந்தன நாளைஉணர்த்துவீர்.

[கூட்டம் கலைகிறது]

---

* சிந்-விம-35.

# காதலின் திறம் கழறிய பான்மை

## II

[பாண்டியன் அரண்மனை; மாலை; பாண்டிமாதேவி வீற்றிருக்கிறார்]

பாண்டிமாதேவி:—*கண்ணகி! கண்ணகி!*

(பணிப்பெண் வருகிறாள்)

*பங்கயச் செல்வி எங்குளாள்? அழைத்து வருவாய்.*

[கண்ணகி போகிறாள்]

பாண்டிமாதேவி:—*அரசர் அமைதியின்மைக்குப் பங்கயச் செல்வியும் ஒரு காரணம்...காதற் குறிப்பைக்கண்டு கருத்தின்படி விடுவதே முறை...பாழும் பகை மூண்டது...பழைய நட்பில் பகையும் வாழுமோ...எல்லாம் காலத்தின் செயல்...காலத்தின் போக்கைக் கடந்தவர் யாவர்; அன்றமைத்ததை அகற்றுவார் உள்ரோ?...*

[பங்கயச்செல்வி வருகிறாள்]

பங்கயச்செல்வி:—*அம்மா! ஏன் அழைத்தீர்? தந்தை என்று வருவார்?*

பாண்டிமாதேவி:—*உன்னுடன் பேசுங்கால் என்மனம் திடம் பெறுகிறது; இதற்கே அழைத்தேன். தனியே என்னைக் காணில் பற்பல நினைவும் பற்பல கவலையும் பறந்து வந்தெனைச் சூழ்கின்றன; உன் தந்தையிடமிருந்து செய்தி ஒன்றும் வந்திலது. என்றுயிற்றே அவர்தம் முயற்சி.*

பங்கயச்செல்வி:—தாங்கள் கவலையற்றிருந்த நாளை யான் கண்டது ஏது? இக்கவலை எதற்கு? கவலையால் வருவது காந்துறை நோய்களே. கவலையால் விலகுமோ கலக்கிய துன்பம். தந்தையும் கவலையற்றிருந்ததைக் கண்டிலேன். வெற்றி அடைந்தபின்னும் வீண் உழைப்பு எதற்கோ?

பாண்டிமாதேவி:—நாகனார் அகன்றவன்றே சோழன் வெல்வான்; இன்னும் ஓர் போர் நேரினும் நேரும் என்பர். அதனாற் படையினைப் பெருக்கிப் பாங்குறச்செய்து ஒற்றுமை புரியவே உன் தந்தை ஓயாது முயல்கிறார்.

பங்கயச்செல்வி:—சோழனால் ஒருதீமையும் நேராதென்பது திண்ணம். வெற்றியும் தோல்வியும் வேறுன்றின அல்ல; தோற்போர் வெல்வர் வெல்வோர் தோற்பர்; ஒற்றுமை உண்டாக்கல் ஒருவரால் இயன்றதோ? ஒற்றுமை உணர்ச்சி பிறர்தர உறுமோ? "உட்பகை தீரின் ஒற்றுமை நேரும், நாட்டின் பற்று நல்வழி உற்று, நாடெனும் அன்பு நாள்தொறும் தழைக்க, அறிவின் தேர்ச்சியும் அன்பின் முதிர்வும் பெறினே பெறுவர், பெறற்கரும் ஒற்றுமை. இந்நாட்டின் நிலைமையில் இது பெறுதற்கெளிதோ! சிற்றரசர் யாவரும் தனியரசு எய்தத்தருணம் பார்த்திருப்பர். ஒருவரை ஒருவர் ஏமாற்ற முயலுவர். இவர்களுக்கிடையில் நாகனார் போந்தது இவர்கள் நன்மைக்கே போலும்.

பாண்டிமாதேவி:—செல்வி! அரசரின் ஆருயிர் நண்பர்பால் ஐயமோ கொண்டாய்! மறந்தும் இதனை அரசரிடம்

கூறேல்; அரசர் செய்கையையும் நீ வெறுப்பவளானாய்; மற்றெவரினும் உன்னாலன்றோ அரசர்க்குத் துன்பம். தந்தையைப் பழித்தல் தக்கதாய்க் கொண்டாய். பகைவனைக் காதலித்த பான்மையின் பயனோ இது? பெரியாரைத் தூற்ற நீஎங்கு கற்றனை ? பகைவரைக் காதலித்தோர் பாழுறாதிருந்ததில்லை. ஏனோ நீ இங்ஙனம் செய்யத் துணிந்தனை? உன் பொருட்டன்றோ உன் தந்தையின் துயரமெல்லாம்; உன் தந்தையார் அரிதில் காத்த இந் நாட்டை, உனை அவன் மணந்து எளிதில் அடைவான்; இதற்கோ இப்பாடுகள்; எண்ணரும் போர்கள்; இறந்தவர் எண்ணிலர்.

பங்கயச்செல்வி:— அம்மா! யான் அறியாது கூறினேன். பொறுத்தருள வேண்டும். இனி என் தந்தையை என்றும் குறைகூறேன். இன்று முதல் என்னறிவு திருந்தப்பெற்றேன். அம்மா! மற்றொன்று கூறியதற்கு யான் செய்வதொன்றறியேன்.

[சற்று அழுகையுடன்]

என் அன்னையே இங்ஙனம் சொல்லத் தகுமோ! என்னைச் சோதனை செய்தலோ தங்கள் கருத்து...இந் நாட்டினை ஆள மகனில்லாக்குறையோ என் குறைக்கேதிற்பது; யான் இந்நாடு வேண்டேன்; தாங்களும் தந்தையும் இதனை யாருக்காயினும் அளித்திடுமாறு வேண்டுகிறேன்; என்னைத் துன்புறுத்தாதீர்கள்.

பாண்டிமாதேவி:—இதனிற் கொடிதும் உளதோ ? இஃதோ யாம் வருந்தாதிருக்க நீ கருதிய உபாயம்,

பங்கயச்செல்வி:—[அழுதுகொண்டு] இது பொருந்தாதாயின் வேறென்று சொல்வேன். என் தந்தைக்கும் தாய்க்கும் பிரியமாயின் மணத்தினைத் தவிர்த்துத் துறவு பூண்பேன்.

பாண்டிமாதேவி:—இதனைக் கேட்டார் நகைப்பர்; பிதற்று திருப்பாய். எம்மை இன்புறுத்த நீ நினைந்தவை நன்று! நன்று!!

பங்கயச்செல்வி:—அம்மா! [அழுகையோடு] எனக்கு வேறு வழி தோன்றவில்லையே ... நான் மணமின்றி என் தந்தையும் தாங்களுமுள்ளவரை உங்களுக்கினியன செய்து இருப்பேனாக. வேறெவரையும் மணக்குமாறு வற்புறுத்தாதிருக்க வேண்டுவேன்.

பாண்டிமாதேவி:—நன்று! நீ வருந்தாதிருக்க; நின் தந்தை வந்த பிறகு இதனைப்பேசுவோம்; நீ கவலையற்றிரு; யான் சற்று இளைப்பாறுகிறேன்.

பங்கயச்செல்வி:—அம்மா கவலையின்றி இளைப்பாறுங்கள். தங்கள் விருப்பப்படியே என்றும் நடப்பேன்.

[பாண்டிமாதேவி போய்விடுகிறாள்.]

பங்கயச்செல்வி:—[தனியே] ஆ! யான்தோன்றிய நாள்முதல் இத்தொல்லை தொல்லையே ... அந்தோ! கொடிது கொடிது மகளிராய்ப் பிறத்தல்; அதனினும் கொடிது அரசன் மகளாதல்......எனை ஈன்றோர் நோவதோ யானியற்றும் நற்றவம் ... காதலை மாற்றிக் கருத்தழிந்திடுதலில் சாதலே நன்று ... சாதலே நன்று.

அம்மம்ம! இதனைக் கருதவும் தகுமோ ... உண்மைக் காதற்கு ஓய்விலாத்தடைகள் என்பர். இஃது என் னளவில் மெய்த்தது ... காதலில் தடைகள் என் போல் அடைந்தாருளரோ! .... யான் காதல் கொண்ட நாளே பகையும் மூண்டது ... மக்கள் பெற்றது மாறிடா நட்பு ... பெற்றோருற்றது பெருகிய பகையே ... காதலைத் தவிரெனத் தந்தையார் கழறின் என் செய் வேன் ... அவ்வாறு கூறுர் ... மணமே கருதாதிருப் பேன் ... காதல் வித்தைக் கருத்திடைப் பொதிந்து கண்ணீர்தனையே நன்னீராய் வார்த்து, காத்திருப்பதுவே என் கருமமாகும் ... இலவு காத்த கிளியென ஆவனே ... அன்றமைத்ததற்கு ஓரணுவும் தவறுமோ? ... கவலையால் ஆவதென்? ...

## பாண்டியன் கொலையும் பழியற நடித்தலும்

## III.

[திண்டிநகர்; நாகமனிருக்கை; இரவு.]

நாகனார்:—[தனக்குள்] கோழை. மனமோ...ஏன்; மயங்குகிறது! இத்திடமில்லாத் தன்மை இதுவரையில் தோன்றினதில்லை...சோழன் மகனுக்குத் தன் மகளைக் கொடுப்பதில்லை யென்று அரசர் துணிந்தார். அதனை மாற்ற எவராலும் முடியாது......வேறு யாருக்கு மணமுடிக்க நினைப்போ? ... என் மகனுக்கு விவாகம் முடிப்பதற்கு அவர் ஒப்பவில்லை ... நேசமில்லா மணம் நாச காரணமே ... இதெல்லாம் வெறும் பேச்சு ... மக்கள் மனத்தின்படி நடப்பதோ பெற்றோர் கடமை.

[ஓர் சேவகன் வருகை]

நாகனார்:—நீ ஏன் இங்கு வந்தாய்? வெளியே காத்திரு.

சேவகன்:—ரொம்ப நாளாய் ஒரு குறை சொல்லணுமெனு எண்ணியிருந்தேன்.

நாகனார்:—இதுதான் அதற்குச் சமயமோ? போ அப்பால்; யார் என்னைக் காண வந்தாலும் என்னை இப்போது காணமுடியாதென்று சொல்.

[சேவகன் போய்விடுகிறான்]

நாகனார்:— (தனியே) நான் பலமுறை கேட்டும் அரசர் மணத்திற்குச் சம்மதிக்கவில்லை ... கண்ணன் மாறன்

இதனைத் தடை செய்திருத்தல் கூடுமோ ... அவன் ஆழ்ந்த கருத்துள்ளவன். அவனை நம்புதற்கில்லை... என்னைப் படையுடன் இங்குத் தங்கும்படி அரசர் வேண்டியதும் என் சக்ரவர்த்தியின் அனுமதிபெற்றதும் என் நன்மைக்கே. இல்லாவிடில் சக்ரவர்த்தி இவையெல்லாம் யானே செய்து கொண்டவை யென்று என்னைத் திரும்ப அழைத்து விடுவார். இதுவரையில் நடந்தனவெல்லாம் என் எண்ணத்திற்குப் பொருத்த மானவையே ...

சோதிடம் பொய்யாகுமோ...யான் காசிக்குச் சென்றது, காசிநாதனருளால் என் மகனைப் பெற்றது, எல்லாம் முன்னரே கூறியுள்ளது; இவையெல்லாம் உண்மையாயினபோது, சொல்லியுள்ள மற்றவையும் உண்மையாகத் தானே முடியவேண்டும்...என் மகன் அரசனாவான் என்று சோதிடர்கள் உறுதியாகச் சொல்லுகிறார்கள் ... அரசனாவதெப்படி...விஜயநகரத் தரசர், தம் படையாளன் ஒருவனை அரசனாக விடுவாரோ...எல்லாப்பொருளும் அவர் கொள்ள வேண்டியது; யாவரும் அவர் மேன்மையடைய உழைப்பது கடமைபோலும்..:என் வாழ்நாளெல்லாம் போர்செய்தே தொலைந்தன....எத்தனை போர்கள்... என் கையால் மாண்டவர்கள் எத்தனை பேர்கள்.... இவைகளால் எனக்கு என்ன பயன்...விஜயநகரம் உயர்ந்தது ; அரசர் சக்ரவர்த்தியானார்; உலகெலாம் மதிப்பாயிற்று...எனக்குக் கிடைத்தது என்ன?... சம்பளம்...சம்பளமன்றி வேறெதுவும் கொடுத்தது

மில்லை. கொடுக்கப் போவதுமில்லை....அவரை நம்பு தலில் உபயோகமில்லை...அவரை எதிர்பார்த்திருந்தது என்மூடத்தனம். யான் ஜெயித்து ஜெயித்து அவருக்குக் கொடுப்பது எதற்கு? .... யான் ஜெயித்த நாடுகளில் ஒன்று எனக்கிருந்தால் என்ன...அப்பப்பா! நான் ஓர் நாட்டிற்கு அரசனாகிவிடுவதா?...மற்றுமுள்ள வீரர்களை அனுப்பி என்னைக் கொன்று செல்வார்... அவர் பகை யின்றியும், அன்னியர் பொறாமையின்றியும் அரசனாவ தற்கு நான் தேர்ந்துள்ளது ஒரே வழிதான்... ஒரே வழிதான்...என் மகனுக்கு அரசன் மகளை விவாகம் செய்து கொண்டால் இராஜ்ஜியத்தை எளிதாக அடையலாம்...என் மகனோ என்னினும் சிறந்த போர் வீரன். அரசன் மகளின் அறிவிற்கும் அழகுக்கும் ஏற்றவன் அவனே ...தோல்வியுற்றோடிய சோழன் மகனோ இவளைக் கொள்வது? .... பாண்டியன் வெற்றி ஏன்றல் ஆனது. பாண்டியன் நாடு ஒற்றுமை குலைந் துள்ளது. பாண்டியனுக்கு ஆண்மகன் இல்லை....என் மகன் இவ் விவாகத்திற்குச் சம்மதிப்பானா...பாண்டி யனைப் போலவோ நான் பிள்ளை வளர்த்துள்ளேன். என் சொற்படி என் மகன் நடப்பவன்; என் மகன் ஆண்மைக்கேற்ற அழகுள்ளவள் அரசன் மகளே.... கண்டவுடனே காதல் கொள்வாள் ... ஸ்திரீதனமாகக் கிடைத்த நாட்டினை அடைவதை விஜயநகரத்தரசர் எப்படித் தடுக்கமுடியும்? என் மகனிடம் அவருக்கு அளவிலா அன்பு...முறைதப்பிய மணமென்று என் உறவினர் கூறுவரோ? அரசர்கள் எக்குலத்தாரையும்

விவாகம்செய்யலாம் என்ற விதிஉண்டு. நம் முன்னோன் ஒருவனும் பாண்டியன் மகளை மணந்துள்ளான்; யார் இந்த விவாகத்தில் குறை கூறக்கூடும்...குறை கூறி னாற்றான் என்ன? உறவின் முறையார் எதற்கும் குறை கூறுவதுதான் வழக்கம். அரசனுனயின் உறவின ரெல்லோரும் தாமே உறவு கொண்டாடுவர் ... ...

பாண்டியன் மகளைக் கொள்வதுதான் சிறந்தது... பாண்டியன் உள்ளவரையில் இது பலிக்குமோ ?.. பாண்டியன் இல்லையென்று நினைத்துக்கொள்வோம்.... வேறு தடை யுண்டா ?...இல்லை ! இல்லை !! பெண்கள் என்ன தடை செய்யமுடியும்? சிற்றரசர்கள் ஒருவரும் இதற்குத் தடை கூறார். அவர்களை அடக்குமுறையை யான் அறிவேன். இவர்களில் ஒருவனே மூடன். அன்னிய மணத்தை இன்று காலையில் கண்டித்துப் பேசினன். இவன்தடை என்னசெய்யும்? இவனுக்குப் பெரும் படை யேது. இவன் கண்டித்துப்பேசியதும் ஒரு வகையில் என் நன்மைக்கே; இவன் அரசனை வெறுத்து வெட்டி வெட்டிப்பேசினன்; இவனே அரசனைக் கொன்றுனென்று பின் எளிதில் இடுபழி சுமத்திக் காட்டலாமன்றே.

[வேலைக்காரன் ஒருவனைக் கூப்பிடுகிறன்.]

நாகனுர்:—ராமுடு! ராமுடு!! [சேவகன் வருகிறன்] எங்கு போயிருந்தாய்? கூப்பிட்டும் வரவில்லை.

ராமுடு:—மன்னிக்கவேணும்; எஜமான் ஏதோ பெரிய யோசனையில் இருப்பதாக நினைத்து, நான் வெளியே இருந்தேன். காப்பாற்றணும்.

நாகனார்:—இவ்வீட்டினின்று இரண்டாவது வீட்டில் என் மனிதர்கள் இரண்டுபேர் இருக்கிறார்கள்; நான் கூப்பிட்டேனென்று அவர்களை அழைத்துவா; சீக்கிரம் வா.

ராமுடு:—சித்தப்படி.

நாகனார்:—(தனியே) இதுவே நல்ல தருணம்; அரசன் மதுரைக்குத் திரும்பினால் நம்மெண்ணம் ஒன்றும் நிறைவேறாது...இதுவே நல்ல சமயம் ... இச்சமயம் தப்பினால் எச்சமயம் வாய்க்குமோ .... (சற்று அங்குமிங்கும் நடந்துகொண்டிருக்கிறார் ... ) யான் கேட்குமுன் படைத் தலைமை எனக்கு ஈந்தார்; என்னை உயிர்த் தோழனாக நம்பியிருக்கிறார் .... என்னிடம் முழு நம்பிக்கையோடு இன்றிரவு தூங்குவார்...இவரைக் கொல்வது தகுமோ?....

[சற்று நேரம் அசைவற்று நிற்கிறார்]

பாபமாவது ... புண்ணியமாவது...பலரையும் கொன்று ஓர் அரசன் அவர்கள் நாட்டையும் சொத்தையும் அடையலாம்; இதுயுக்த தர்மம் ... ஒருவன் தான் மேம்பாடடையவோ அல்லது கோபம் கொண்டோ மற்றொருவனைக் கொன்றால் அது கொலையாம் ... இவர்கள் நீதி அநீதிதான் ... இவைகளைச் செய்தது யார் ... எல்லாம் கட்டுக்கதைகள் .... பாபமாவது, புண்ணியமா

வது ... எல்லாம் புரட்டுகள் ... தண்டனை விதிகள் வகுத்தது அரசர்கள்; அல்லது அவர்கள் சொற்படி கேட்பவர் ... அரசர்கள் செய்பவை குற்றமல்ல என இவர்கள் எழுதிவைத்தனர் ... இவ்விதிகளை நாம் ஏற்படுத்தினால் இவைகளை மாற்றியே எழுதுவோம்... ஓர் அரசனுக்காக நான் போரில் கொன்றவர் கணக் கில்லை; ஒரு கொலைக்கு இவ்வளவு பாபம் என்று கணக் கிட்டால் ... என் பாபம் கணக்கிட முடியாது ... நரகத் திலும் எனக்கு இடம் கிடைக்குமோ? இன்னொரு நரகம் உண்டுபண்ண வேண்டியதுதான் ... நடு இரவாகி விட்டது ... இன்னும் இவர்கள் வரக்காணவில்லை ...,

[எட்டிப்பார்க்கிறான். ராமுடு இருவருடன்வருகிறான்]

நாகனார்:—திம்மண்ணா ரெண்டிலே பலபோதாமு [திம்மண்ணா வா உள்ளே செல்வோம்]

[இருவருடனும் நாகனார் உள்ளே செல்கிறார்]

[பாண்டியன் படுக்கை அறையில் நடு இரவில் உறங்க, காவற்காரன் ஒருவன் தள்ளாடி நடந்துகொண்டிருக் கிறான்]

காவலன்:—எழவு தூக்கம் [தள்ளாடிக் கொண்டு] எழவு தூக்கம் தள்ளுது ... இண்ணைக்கின்னு தூக்கம் இப் படி வருது. கண்ணன்மாறன் வேலைக்கு வந்ததும் போதும்; நாங்க படுற பாடும் போதும்; மூணுதேரம் வந்துட்டார் ... கீழே படுக்கக்கூட விடமாட்டேன் என்குறார். முளிச்சிக்கிட்டே படுத்திருந்தால் என்ன

தலைபோச்சு ... இத்தன நாளாய்த் தூங்கினோமே; ராசாவைப் புலியா தூக்கிப்போச்சுது ... ஏது இனி நிக்கெமுடியாது ... தள்ளுது தூக்கம். கீழே சத்தே படுக்கிறேன்.

[கீழே படுக்கிறான் — சற்று நேரத்திற்கெல்லாம் உறங்கிவிடுகிறான். நாகனார் ஆட்கள் வருகிறார்கள். காவற்காரனைப் புரட்டிப்பார்க்கிறார்கள். உண்மையில் தூங்குகிறானென்று கண்டு கொள்கிறார்கள்.]

**திம்மன்:**— மீரு பைடே சூசு கொனுண்டாரா? நேனு லோபல போதானு. [நீர் வெளியே பார்த்துக்கொண்டிருக்கிறீரோ நான் உள்ளே போகிறேன்.]

**பொம்மன்:**— மஞ்சிதி; நேனு பைடெ சூஸ்கொனுண்டானு; மீரு லோபல வெள்ளண்டி; தப்பிஞ்சு விடகூடாது தெலிசினு.

[நல்லது நான் வெளியே பார்த்துக்கொண்டிருக்கிறேன். நீர் உள்ளே போகலாம் — தப்பிக்கவிடக்கூடாது — தெரியுமா]

**திம்மன்:**—தெலுசுனு, சேஸபிம்மட சூஸிகோ. [தெரியும் செய்தபிறகே பார்த்துக்கொள்]

[திம்மன் உள்ளே செல்கிறான். சற்றுநேரத்திற்குப் பின் கண்ணன்மாறனார் வருகிறார். அவர் வருவதைப் பார்த்த பொம்மன் ஓடிவிடுகிறான். கண்ணன்மாறனார் காவலன் உறங்குவதைப் பார்க்கிறார்.]

கண்ணன்மாறனார்:— இவனைப்போன்றோர் இன்னும் சிலர் இருப்பின் அரசற்கு அழிவே இல்லை. அற்பனைத் தூங்கக்கூடாதென்று எத்துணை கண்டித்தும் தூங்கி விட்டான்.

[அடித்து எழுப்புகிறார். காவற்காரன் அலறிக்கொண்டு எழுந்திருக்கிறான்]

கண்ணன்மாறனார்:—அற்பனே அலறாதே; அரசன் விழிப்பார்.

காவற்காரன்:— ராசா எங்கே முளிக்கப்போகிறாரு.

கண்ணன்மாறனார்:— ஏதோ சத்தம் கேட்டது; உள்ளே போய்ப்பார்.

காவற்காரன்:— தனக்குள் ... இவர் ராசாகிட்டியே இருந்துகிட்டு இந்தப்பாடு படுத்துறார். இவர் தொலையக் காலம் வல்லியே.

[உள்ளே போகிறான். உள்ளிருந்த விளக்கைக் கொளுத்துகிறான். உள்ளே பதுங்கியிருந்த திம்மன் மெதுவாக வெளியே வரும்போது கண்ணன் மாறனார் பிடித்துக் கொள்கிறார். அவன் மீது இருந்த இரத்தக் குறிகளைக் காண்கிறார்.]

கண்ணன் மாறனார்:—அடே! நீ யார்? நீ ஏன் உள்ளே சென்றனை? உள்ளே சென்று என்ன செய்தாய்? என்ன செய்தாய்? உண்மையைச் சொல்.

[உள்ளே சென்ற காவற்காரன் அரசன் இறந்து கிடப்பதைக்கண்டு அரசனைத் தூக்குகிறான். அழுகிறான்.]

கண்ணன்மாறன் (தனக்குள்) இவன் ஏன் அழுகிருன்.
[அரசன் வாளால் குத்துண்டு இறந்திருப்பதைக் கண்டு அவ்வாளை உருவிக்கொண்டு கையில் வாளுடன் வெளியே வருகிருன்.]

கண்ணன்மாறன்:—அடேமூடா! இஃதென்ன உடையெலாம் இரத்தம். இவ்வாளேது சொல் சொல்.

காவற்காரன்:—அழுகிருன்.

கண்ணன் மாறன்:—ஆ! ஆ!! ஏன் அழுகிருய்? அரசருக் கென்ன? ஆபத்தா? சொல் விரைவில் அழுகையை நிறுத்து.

காவற்காரன்:—ஆமாஞ்சாமி; இந்த வாளால் குத்திக்கொண் ணுட்டாங்க.

நாகனுர் வருதல்:—ஆம் இது என்ன நடு இராத்திரியில் இக் கூத்து (காவற்காரனைப் பிடித்துக்கொள்கிருர்.) இவனே கொலை செய்தவன் (கண்ணன் மாறனை நோக்கி) ஐயா! இவனை விட்டுவிடுவீர். அரசர்க்குத் தீங்கொன்று மில்லையே என்று பார்த்துவர இவனை அனுப்பினேன். நான் இவ்விதம் கவனித்துக்கொண்டிருக்கும்போதே இவ்விதம் நடப்பதா? ஐயையோ பாவம்! அரசன் இறந்தாரோ? ஏ பாதகா! கொல்லத்துணிந்தாயா? (காவற்காரனை அடிக்கிருன்) உன்னை வாளுடன்பிடித்தேன். இன்னும் சற்று பொறுத்து வந்தால் என்ன செய்திருப்பீர்களோ?

[கண்ணன்மாறனுர் திம்மனை விட்டுவிட்டு உள்ளே சென்று அரசன் இறந்ததைப் பார்த்து வந்து ஒன்றும் தோன்ருது நிற்கிருர்.]

நாகனார்:—திம்மா இவனைக் கட்டு. [காவற்காரனை அவனிடம் ஒப்புவிக்கிறார். அவனைத் திம்மன் பிடித்துக்கொள் கிறான்]

காவலாள்:— (அழுதுகொண்டு) நான் ஒன்றும் செய்ய வில்லையே.

நாகனார்:—பொய் சொல்லாதே கொலைகாரா. (காவற்காரனை அடிக்கிறான்.)

கண்ணன் மாறனார்:—தலைவ! காவலாள் படுத்துறங்கியிருந் தான். அவனை எழுப்பி உள்ளே செல்ல யானே ஏவினேன், யான் வருமுன், அரசர் படுக்கை அறைக் குள் சத்தம் கேட்டது; உள்ளே சென்று பார்க்கச் சொன்ன காவலாள் உள்ளே சென்றபின் இவன் (திம்மனைக் காண்பித்து) மெல்லென வெளிவந்தான். யான் இவனை அப்போது பிடித்தேன்.

நாகனார்:— இருக்கலாம்; பாசாங்குக்காரப்பயல்; கொன்று விட்டு ஒன்றும் தெரியாதவனைப்போல் குறட்டை விட்டிருப்பான்.

காவற்காரன்:—ஐயோ! நான் ஒன்னும் செய்யலையே சாமி [அழுகிறான்]

நாகனார்:—[காவற்காரன் கையிலிருந்த வாளை உருவிக் கொண்டு] அரசனைக் கொன்ற வாளால் உன்னையும் கொல்வேன்; ஐயோ! கொலை ... பாண்டியன் படு கொலை! ... திம்மா! இவனை நன்றாக இங்குக் கட்டிவை; சிற்றரசர்களை எழுப்பி வருகிறேன். ஐயோ! படுகொலை

படுகொலை!! (ஓடுகிறான்.) [காவற்காரன் தப்பி ஓடப் பார்க்கிறான். திம்மன் அவனை விடாது பிடித்து அடித்துக் கட்டுகிறான். சிற்றரசர் ஒவ்வொருவராக வருகிறார்கள்; அரசன் இறந்ததைக் காண்கின்றனர். வருந்துகிறார்கள்.]

ஓர் சிற்றரசன்:—ஆ! கொடுமை! கொடுமை!!

மற்றொரு சிற்றரசன்:— ஒற்றுமைக்குழைத்து வெற்றுடலாயினர்; கொடிது! கொடிது!!

மற்றொருவன்:— இஃதென்ன;, யாம் ஈண்டுள்ள போதே இங்ஙனம் நடப்பதோ?

நாகனார்:—(வந்து) இதைவிடக்கொடுங்கொலையும் உண்டோ? ஐயோ! அரசரைப்போய்ப் பாருங்கள்; இரத்த வெள்ளத்தில் நனைந்து கிடக்கிறார். நீங்கள் எல்லோரும் இங்கிருக்கும் போதே இவ்விதம் நடப்பதா! இன்னும் என்னென்ன நடக்குமோ! என் படையாட்களையும் தயாராக இருக்கச்செய்திருக்கிறேன். (ஓர் சிற்றரசனை நோக்கி) ஐயா! நீரே இங்குள்ளவர்களில் வயதில் முதிர்ந்தவர்; நீரே தலைமையாக இருந்து இதனை விசாரியும்.

சிற்றரசன்:— நீரே படைத்தலைவர். நீர் விசாரித்தலே நன்றாம்.

நாகனார்:— உண்மை; ஆனால் யானே கொலை செய்தவனைப் பிடித்தவன்; ஆதலால் வேறொருவர் விசாரித்தலே நல்லது.

ஓர் அரசன்:— நடந்தன கூறுவீர்.

நாகனார்:— ஒவ்வொரு இரவும் அரசன் உறங்குவதையும் காவலாளர்கள் காப்பதையும் ஒவ்வொருநாளும் ஒவ்வொரு இரவும் இரண்டொருமுறை நான் பார்த்து வருவதுவழக்கம்; அதுபோன்று இன்று, முதல் முறையாக இத்திம்மனைச் சென்று பார்த்துவர அனுப்பினேன்; இவன் எப்போதும் என் அருகிலிருப்பவன்; உண்மையுள்ளவன்; அவன் திரும்பிவர நேரமாயிற்று; நானே சென்றேன்; கண்ணன்மாறனார் இவனைப் பிடித்துக்கொண்டிருந்தார்; காவற்காரன் அப்போது, தான் கையில் வாளுடன் வெளியே வருவதைக் கண்டேன். உடையெலாம்இரத்தம்பட்டிருந்தது. இன்னும் அவன் மேலிருக்கும் இரத்தத்தையும் பாருங்கள்; குத்தியவுடன் அரசர் இவனை எட்டிப்பிடித்திருக்க வேண்டும் என நினைக்கிறேன்.

ஓர் சிற்றரசன்:— கண்ணன்மாறனாரை இங்கு கண்டிலோம். அவர் எங்குச்சென்றுளார்.

மற்றொரு சிற்றரசன்:—பாவம் படைத்தலைமையைப் பறிகொடுத்தவர். அவரும் காவற்காரனும் சேர்ந்து ...

நாகனார்:—நான் அப்படிச்சொல்லவில்லை. நீங்களே இதனைத் தீர விசாரியுங்கள்.

காவற்காரன்:—அரசர் குத்துயிர் கொலை உயிராகக் கிடந்தார். ரத்தம் வடிஞ்சது தெரியலை. அவரைக் கட்டிப் பிடிச்சுத் தூக்கினேன். அந்த வாள் குத்தியிருந்ததை

உருவிலேன். அரசர் இறந்துபோனார், அழுதேன், ஓடிவந்தேன், என்னைப்பிடிச்சுக் கொண்டார்.

முதியோன்:—திம்மனே, நீ உள்ளே சென்றபோது பார்த்தனையோ?

காவற்காரன்:—இல்லே சாமி; நான் பொய் சொல்லவா ... ?

முதியோன்:—அப்படியாயின் திம்மன் குற்றமற்றவனாகிறான். நாளைக் கண்ணன்மாறனாரை விசாரித்து உண்மை தெரிவோம். அவர் நடத்தை இயற்கைக்கு மாறாய் உளது. உள்ளே கரந்துறை கருத்தினை யாரே காண வல்லார்?.

நாகனார்:—அங்ஙனம்செய்தலே நலம். நேற்றுச்சிலர் வெட்டிப் பேசியபோதே இங்ஙனம் நடக்கும் என்று சந்தேகித்ததாகவும் அவர்களில் ஒருவரே இக்கொலைக்குக் காரணமாகுமென்று கண்ணன்மாறனார் சொன்னதாகவும் கேள்வியுற்றேன். அவரை அவசியம் விசாரிக்க வேண்டும்.

ஓர் சிற்றரசன்:—உண்மையை ஒளியாது கூறியதின் பலனே இது. உண்மை உரைப்பவன் ஊரார் பகைவன். நானே கொலை செய்தவன்; கண்ணன்மாறனார் எங் கொளித்தனர். அவரே இதனைச் செய்தவராகும். உண்மை கூறியதற்கு என்மேற் பழியா !

நாகனார்:—அப்படித்தான் சந்தேகப்படவேண்டியிருக்கிறது.

ஓர் சிற்றரசன்:—எல்லாம் நாளை விசாரித்து அறிவோம்.

[மற்றொரு சிற்றரசனை நோக்கி] நீயே நாம் இளவரசிக்குரிய இளஞ்சிங்கம். நீ முயற்சிசெய்தால் இளவரசியார் உன்னையே மணப்பர். நீயும் பேரரசர் ஆகலாம்.

நாகனார்:—அரசன் இறந்தார். நீங்கள் அதற்கு வருந்தவில்லை. இதுவோ இப்பேச்சுக்குரிய காலம். போவோம் வாருங்கள். அரசரை அடக்கம் செய்வதைக் கவனிக்க வேண்டும். இன்றிரவு தூக்கமில்லாதாயிற்று. சற்றேனும் தூங்குவோம். போகலாம் எல்லோரும் [ஓர் சேவகனை நோக்கிக் காவற்காரனை ஒப்புவித்து] இவனைச் சிறையிட்டு நாளை ஒப்புவிப்பாய்.] [மற்றொருவனை நோக்கி] நீ அரசரைக் காத்திரு; இறந்தார் என்று அசட்டை செய்யாதே.

ஓர் சிற்றரசன்:— (தனக்குள்) குற்றத்தை மறைக்க இத்தனை நடிப்பா! நல்ல வேடம்! நல்ல நடிப்பு .... நாகனாரை அடக்க நம்மிடம் படையேது...இராமன் ஆளிலென், இராவணன் ஆளிலென். நடப்பது நடந்தே தீரும்.

## பாண்டிமா தேவி படுபல துயரம்

## IV

[மதுரை; பாண்டியன் அரண்மனை; காலை;]

**பாண்டிமாதேவி:**— *இரவெல்லாம் தூக்கம் சற்றும் கொண்டிலேன். என்னென்ன தீயன கண்டேன்.... ஆ! என்ன நேருமோ! கண்ணகி! கண்ணகி!!...[கூப்பிடுகிறாள்]*

[கண்ணகி வருகிறாள்]

**பாண்டிமாதேவி:**—*அரசரிடமிருந்து யாராயினும் இரவில் வந்துளரோ?*

**கண்ணகி:**—*அம்மணி ஒருவருமில்லை. நேற்றொருவர் அரசர் தங்கும் ஊரிலிருந்து வந்தவர், அரசரால் நாகனுருக்குப் படைத்தலைமை அளிக்கப் பட்டதென்றும், மாறனார் மெய் காப்பாளருக்குத் தலைவராக்கப்பட்டார் என்றும் தெரிவித்தார். இதைத் தவிர வேறொன்றும் தெரியவில்லை.*

**பாண்டிமாதேவி:**—*மாறனார் மெய்காப்பினை மேற்கொண்டாரெனில் பயம் இனி இல்லை. பங்கயச்செல்வி எங்கே? அழைத்துவா.*

[கண்ணகி போய்விடுகிறாள்]

**பாண்டிமாதேவி:**—*(தனியே) அவள் துவராடையுடுத்தி அலைவது போன்று கனவிற் கண்டேனே! இஃது எதையுணர்த்துமோ? ஏது வருமோ? [மற்றோர் பணிப்*

பெண் தோன்றி] அம்மணி! கண்ணன்மாறனார் தங்களைக்காணக் காத்திருக்கின்றார்.

பாண்டிமாதேவி:—உடனே வரவிடு; ஏன் இதுவரை தடை செய்தனை?

[கண்ணன்மாறனார் வருகிறார்]

பாண்டிமாதேவி:—ஐய வருக! அன்ப வருக! அரசர் சுகமே போலும்; சற்று முன்பே தங்களை மெய்காப்பாள ருக்குத் தலைவராக்கிய செய்தி எட்டிற்று; இஃது உண்மையே போலும்.

கண்ணன் மாறனார்:—உண்மை.

பாண்டிமாதேவி:—தங்கள் முகத்தில் துக்கக் குறி தோன்று கின்றது. படைத் தலைமை இழந்ததைப் பற்றி வருத் தமோ? வருத்தம் தவிர்வீர். அரசர் எதுவும் காரண மின்றிச் செய்யார்; தங்களிடம் குறை கண்டு இதனைச் செய்திரார் என்பது திண்ணம். தங்களைவிட எங்க ளுக்கு யார் உளர் உற்றார்? தாங்கள் வேண்டிய வேண்டியாங்கு அரசர் செய்வர். வருந்தலீர் ஐய!

கண்ணன்மாறனார்:—என்னை உற்றானென உடன்கொண்டு சென்றதற்குத் தக்கதே அடைந்தார் ... தக்கதே அடைந்தார் ....

[அழத் தொடங்குகிறார்]

பாண்டிமாதேவி:— [பதைபதைப்புடன்] ஏன் அழுகிறீர்? அரசருக்கு என்ன நேர்ந்தது! என்ன நேர்ந்தது!

கண்ணன்மாறனார்:—அரசரை ... ... ... ... [அழுகிறார்]

பாண்டிமாதேவி:— [பதைபதைப்புடன்] ஏன் அழுகை? ஐயா! அரசருக்கென்ன நேர்ந்தது? என்ன நேர்ந்தது?

கண்ணன்மாறனார்:—நாகனார் குத்திக்கொன்றார். [அழுகிறார்]

பாண்டிமாதேவி:—ஆ! என் நாதா! ஆ! ... நாதா ஐயோ!... [மூர்ச்சித்துக் கீழே விழுகிறாள். பணிப்பெண்கள் தூக்கித் திகைப்பு நீக்குகிறார்கள்]. ஆ! ... எங்ஙனம் அலறித் தவித்தீர்... [அழுகிறாள்] என்னை என்ன நினைத் தீரோ. ... [முகத்தில் மோதிக்கொண்டு அழுகிறாள்] முறைசெய்து காப்பாற்றுமன்றதற்கிதுவோ பலன்... ஆ! பாவி! நன்றி மறந்தனையே ...... நன்றி மறந் தனையே! ... ஆ என் நாதா! ... என்று நான் காண் பேன்? [அழுகிறாள். மூர்ச்சித்துக் கீழே விழுகிறாள். பணிப்பெண்கள் மறுபடியும் தேற்றுகிறார்கள்.]

பாண்டிமாதேவி:— [அழுகையோடு] ஆ! 'காட்சிக் கெளிய ரானதன் பலனோ? .... கடுஞ்சொல் இன்மையின் பலனோ?............ [அழுகிறாள்; மாறனாரை நோக்கி] உயிர் போய்விட்டதோ நன்றாய்ப் பார்த்தீரா? ... மருத்துவர் ஒருவரும் பார்க்கவில்லையா?

கண்ணன் மாறனார்:—[அழுகையோடு] அம்மணி படுத்துறங் கும்போது கொன்றுவிட்டான்.

பாண்டிமாதேவி:— ஏ பழிகாரா! கொன்றுவிட்டனையே! ஆ! இக்கொடுமையை இவ்வுலகம் தாங்குமோ? ...

ஏபாவி! போரில் கொன்றனையாயின் யான் ஒருக்கால் பொறுத்திருப்பேன் ... உன்னைப் போர்வீரனென்று போற்றினர் அன்றோ? ஆ! தூங்கிய அரசனைக் கொன்றனைதா உன் வீரம்! ஆ! உன்னைக் கொல்வாரு மிலரோ? ... எத்தனை குடியைப் பாழாக்கினையோ?.... ஆ! என் செய்வேன்...யான் யாருமற்றவளாயினேன்... யார் எங்களை ஆதரிப்பவர்? ... என் நாதா! யாங்கள் பரதவிப்பதைப் பார்க்காது அகன்றீர்; நாதா! நாதா!! தூங்காமை, கல்வி, துணிவுடைமை இம்மூன்றும் தாங்கி யதின் பயனோ? இது.

[பங்கயச்செல்வி ஓடி வருகிறாள். பதைபதைப்புடனும் அழுகையுடனும்] அம்மா ஏன் அழுகிறீர்! என்ன உற்றது? ஒன்றும் சொல்லாது ஏன் அழுகிறீர்?

கண்ணன்மாறனார்:— [அழுகுரலோடு] அரசரை நாகனார் கொன்றார்.

பங்கயச்செல்வி:—(அழுகிறாள்.) ஆ! அப்பா! அப்பா! நாங்கள் யாருமற்ற பாவியாயினோம். என்னால் நொந்து உயிர் விட்டீரோ? ... நாயேன் தாம் விரும்பியவாறு நடந்திலேன்...இனி என் தந்தைக்கு நல்லவளாக நடப்ப தெப்போது?... தாம் திரும்பி வருவீர்; தம்மிடத்தில் என் குறை இரத்தலே கடனென நினைந்தேன் ... நான் ஏன் பிறந்தேன்?... என்னால் தங்கள் மனம் புண்ணுற்று ... என் செய்வேன்? ஏழையேன் ... [அழுகிறாள்] அம்மா ... அம்மா ... என் தந்தை என்னை மன்னித்தாரா?

[பாண்டிமாதேவியும் பங்கயச்செல்வியும் அழுதல்]

பங்கயச்செல்வி:—[அழுகையோடு] ஐய! இறக்குமுன் என் தந்தை என்ன சொன்னார்?

கண்ணன்மாறனார்:—ஒன்றுமில்லை.

பங்கயச்செல்வி:—எங்ஙனம் இறந்தார்?

கண்ணன்மாறனார்:—நேற்று நடு இரவில், அரசன் படுக்கை அறையில் சத்தம் கேட்டது. எழுந்து உற்றுக் கேட்டேன். ஓர் பெருங்குரல் கேட்டது. பிறகு ஒன்றும் கேட்கவில்லை. வேறெங்கிருந்தாவது அச் சத்தம் கேட்டிருக்கும் என்று நினைத்தேன். வெளியே வந்து கவனித்தேன். அரசர் படுக்கைஅறையின் கதவு சாத்தியவாறு இருந்தது. காவலாளன் கவலை யற்றுறங்கினன், அவனை எழுப்பி உள்ளே சென்று அரசனை நோக்குமாறு பணித்தேன். அவன் திரும்பு முன் படுக்கை அறையினின்று நாகனாரின் ஆள் திம்ம னென்பான் மெல்லெனவெளியே நழுவுதல் கண்டேன். இரத்தத் துளிகள் அவன் மீதிருந்தன .... அவனைப் பிடித்தேன். உள்ளே சென்ற காவலாளன் அரசர் இறந்ததைக் கண்டு அவரைத் தூக்கி அவர் மேல் தைத்திருந்த வாளினை உருவிக்கொண்டு வெளிபோ வந்தான். தூக்குங்கால் அவன் உடையில் இரத்தமாயிற்று. நாகனார் திடீரெனத் தோன்றி காவலாளனைக் கை வாளுடன் பிடித்து இவனே கொன்றானெனக் கூக்குரல் எழுப்பினர். யான் உள்ளே சென்று பார்த்தேன், அழுகையோடு. அரசர்

உயிரற்றுக் கிடந்தனர். எதைக் குறித்தும் யாதொன்றும் அவர் கூறினரில்லை. இவ்வாறு இறப்பது அவருக்கு எங்ஙனம் தெரியும். இறப்பது தோன்றில் அன்றே இன்னின்ன செய்யென இயம்புதல் கூடும். நாகனார் சூழ்ச்சி என்பதை அறிந்தேன். என்னை இவ்விடம் வரவிடாது தடுப்பான் என்பதும் துணிந்தேன். இனி அவருடன் உறைதல் ஆபத்துக் கிடமென இங்குப் போந்தேன்.

பாண்டிமா தேவி:— [அழுகையுடன்] ஏ பாவி! பழிகாரா! உன் தீமையெல்லாம் எங்கொளித்திருந்தனை? உன் தன்மையறியாது உன்னை நம்பி உன்னால் இறந்தார் அமைச்சனாய் அரசு கொன்ற பாவி! ஆ...என் நாதா... யான் தங்கள் உடன் போந்திலாத பாவியேன் ... உயிர் வாழ்வேன் ... இறந்ததைக் கேட்டும் உயிர்ப் பொறைகொண்டுள்ள கடையேன் நான்.-[முகத்தி லறைந்து கொள்கிறாள்] ஏன் எனக்கு இவ்வுயிர்? [அழுகிறாள்]

கண்ணன்மாறனார்:—அம்மணி! தங்கள் இடும்பை மாற்றற் கரியது; பெரியது. தேறுதல் எளிதல்ல. அரசரோடு யாவும் இழந்தீர் ... எத்துணை அழுதபோதினும், எங்ஙனம் புரளினும், இறந்தோர் எழுவது இல்லையே, அழுவதாலாவதென்ன? இப்பரிவினைத் தவிர்க. இனி நாம் செய்யத்தக்கன கருதலே சிறந்தது; என்னைச் சிறை செய்ய என்பின் ஆட்கள் தொடர்வர் என்பது திண்ணம். நாகனாரை எதிர்க்க நாம் வலியுடையோமல் லோம, இளவரசியைக் கவர்ந்து தன் மகனுக்கு மணம்

முடிக்க அவர் கருதியுள்ளாரென்பதை யான் ஒற்றரால் அறிந்தேன். இளவரசியைத் தன் மகனுக்கு மணம் செய்ய அரசரைப் பன்முறை அவர் வேண்டியதையும் அறிவேன். அதற்குச் சற்றுமிணங்கினாரில்லை. இம் மணமே கூடுமெனச் சில சோதிடர் கூறினார் என்பதும் உணர்ந்தேன். அரசரைஅகற்றினாலன்றி இம்மணம்முடியாதென்பதைக்கருதியே நாகனார் இக்கொலை கருதினார் போலும். இம் மணத்தினை முடித்தால், இந் நாட்டை எளிதிற்பெறலாம்; இன்றேல் விஜயநகரத்தரசர் தன்னை வெருட்டி ஓட்டுவார்....என்பது நினைந்தே இங்ஙனம் செய்தாரென்பது உய்த்துணரக் கிடப்பது.

பங்கயச்செல்வி:— [அழுகையுடன்] அம்மா! நான் என் செய்வேன். இவனை நான் வெறுத்தது எதற்கு? இவன் மகனை மணம் செய்யவோ? ... அரசர் இறவாது யான் இறந்திருப்பின் நலமாகும். அம்மா! ... நாம் என் செய்வோம்? இவன் கையினின்று எப்படித் தப்புவோம். அம்மா! [அழுகிறாள்] எனக்கோர் வழியும் தோன்றிலது. யான் எங்குச் செல்வேன்; யாரிடம் புகுவேன்; யாங்கொளித்திருப்பேன்...பாவி!பாதகா!... உனக்கிறுதி கிட்டிற்றிலையே! கூற்றுவன் உன்னைக் குறுகக்கூசினன்போலும்; நாங்கள் அல்லற்பட்டு ஆற்றாதழுத கண்ணீர் உனது செல்வத்தைத் தேய்க்கும்... தேய்க்கும் ...

கண்ணன்மாறனார்:—அம்மையே! நாம் இன்னும் அழுவதால் ஆவதென்ன. இனிச் செய்யத்தக்கன கருதுவீர். யான் தங்களைக் காத்தற்கே இங்கு வந்துளேன்.

இளவரசியாரை யாம் எங்ஙனமாயினும் காத்தல்வேண்டும் ... அமருவீராக.

பாண்டிமாதேவி:— [அழுதுகொண்டு] எனக்கொன்றும் தோன்றவில்லை. தாங்களேதான் இதற்கோர் வழி காட்டவேண்டும்.

கண்ணன்மாறனார்:—ஒரே ஒரு வழிதான் நமக்கு உளது. அது நாம் சோழன் உதவியை நாடுதலாகும்; இஃதன்றி வேறு வழியில்லை. இன்னும் நாம் பகைமை பாராட்டுதல் பண்பன்று. நாகனார் நட்பினும் சோழன் பகையே நன்மை பயப்பது; இதைக்குறித்துத் தங்கள் கருத்தினை அறிய விரும்புகிறேன்.

பங்கயச்செல்வி:—முற்றிலுமுண்மை. நாகனார் ஈண்டெய்திய நாள் முதல் இதுவே என் கருத்திடைப் பொதிந்தது. சிறும்பியின் வார்த்தை சிறக்குமோ, ஏழை சொல் அம்பலம் ஏறுமோ, என வாளாவிருந்தேன்.

பாண்டிமாதேவி:—என்னறிவு என் வசமில்லை; ஏதாயினும் செய்வீர். யாது செய்யினும் யானதை மாற்றத்தகுதி யற்றவள்... [அழுகையோடு] சோழனிடமா போவது? யார் போவது? அவர் எப்போது வருவார்? அதுவரை பங்கயச்செல்வியை யாம் எப்படிக் காப்பது?

கண்ணன்மாறனார்:—இளவரசியார் இன்றே அரண்மனையை விட்டுப் புறப்படல் வேண்டும். சோழன் இளங்கோ உறந்தையில் உள்ளார்; அவ்வூரே மதுரைக்கு அண்மையில் உள்ளது; அவரிடம் இளவரசியாரை அனுப்ப வேண்டும் யான் இன்றே தஞ்சைக்கேகி அவர் தந்தை

யாரிடம் உதவி வேண்டுவேன். தாங்களும் செல்வியருடன் செல்லுதல் நன்மையே; தங்கள் கருத்தென்னே?

பாண்டிமாதேவி:—ஐய! அரசர் விருப்பிற்கு யான் மாறாய் நடப்பதோ? [அழுகிறாள்] எனக்கு வேறொன்றும் தோன்றவில்லையே. ஆ! தெய்வமே! இவ்விதிக்கு என்னை ஏன் ஆளாக்கினை. [அழுகிறாள்] யார் துணை செய்வது? தனியே எங்ஙனம் என்மகள் செல்வாள்?...

கண்ணன்மாறனார்:—அன்னாய்! யான் அரசன் விருப்பிற்கு மாறாயின செய்ய எளிதில் இசைவனோ? இது மாறாயினதாயினும் இதைத்தவிர்த்து வேறுவழியில்லை. அரசர் கடைசியாகத் தன் மகள் விருப்பத்துக்கேற்ற வாறு செய்யார் என்பது எங்ஙனம் பெறப்படும்? நாகனார் கூறிய மணத்திற்கோ இசைந்திலர். இளவரசியாருக்கு ஏய்ந்த மணாளன் வேறு யாருளன்? ஏற்றதோர் கல்வியும், எழில்பெறு வீரமும், வாய்த்த பேரழகும் வாய்ந்தவர் வளவன் மகனே. பகைமை மாறிய பின், அரசரே ஒருவேளை இம்மணத்திற்கு இசையக்கூடாதோ? ஆதலால் இதிற்றடை கூறாது காமதமின்றித் தக்கது செய்தல் வேண்டும். துணையைக் குறித்துத் தங்களுக்குக் கவலை வேண்டாம். என் மனையே துணையாய் அனுப்புவேன்.

பாண்டிமாதேவி:—ஆயின் பங்கயச்செல்வியை நீர் கூறியவாறு அனுப்புவீர். யான் உடன் செல்லத்துணியேன். [அழுகையோடு] யான் அரசரை இழந்தும் என்னுயிர் பிழைக்கவோ பிறர் வீடு செல்வேன்! நன்றே ஆகுக;

தீதையாகுக. யான் இங்கேயிருப்பதே துணிவு ...
ஆ! என் நாதா! என் பட்டாவது தங்கள் விருப்பிற்கு
மாறாக நடவேன். [அழுகிறாள்]

கண்ணன்மாறனார்:—அம்மணி! காலதாமதமாகிறது. நாக
னார் வந்துவிடுவார். இனிச் செய்யவேண்டியவையோ
மிக உள. விரைவுடன் செய்தல் விழுமியதாகும்.

பாண்டிமாதேவி:—கண்ணா! மன்னிப்பாயாக [அழுகிறாள்] என்
போன்றார் துக்கம் பொறுத்தற்கு இயலுமோ?
(மகளைநோக்கி) பங்கயச்செல்வி! புறப்படு, தாமதம்
செய்யேல். காலந் தாழ்த்தல் சாலவும் தீதாம்.

பங்கயச்செல்வி:—அம்மா! யான் தங்களை விட்டு எப்படிச்
செல்வேன். அக்கொடியான் தங்களுக்கு என்னென்ன
இடையூறு இயற்றுவானோ? (கண்ணீர் ததும்புகிறது)
தாங்கள் தீராத்துயர் உழக்கவும் யான் சுகமே வாழ்
வதோ தக்கது?

பாண்டிமாதேவி:—நான் இதற்கு என் செய்வேன் நாதா!
[அழுகிறாள்]

கண்ணன்மாறனார்:—நான் தடுப்பதைப் பொறுத்தருளுவீர்.
காலமாகிறது. நாகனார் வரின் எனக்கு ஆபத்து; விரை
வில் புறப்படவேண்டும்.

பாண்டிமாதேவி:—பங்கயச்செல்வி! என்னுடன் மடிவதோ
உன் கருத்து? என்னை மடிப்பான் என்பது உறுதி.
உன்னை மடிக்க ஒண்ணுமோ. என் விருப்பிற்கு மாறாய்
நடப்பதில்லையென்று நீ உறுதி கூறினாய்; என் சொற்

படி நட; தடை சொல்லாதே. உடனே புறப்படு. உன்றால் கண்ணனுருக்கும் கடுங்கொலை நேரும். நீ பிழைப்பது முக்கியம். இனி நீ இந்நாட்டின் அரசி யென்பதை உணர்வாய். நீ உயிருடன் உள்ள நாள் வரைதான் இப் பாண்டியன் குடிவாழும். நீ இலையேல் இத் தென்புலங்காக்கும் தொல்குடி எங்கே! உன் னுயிர் போற்றற்பாலது. [அழுகையோடு] என் போன்றோர் வாழ்தல் எதற்கோ! என் செல்வி! புறப் படு அம்மா!... இன்னும் எதிர் மாற்றம் கூறேல்.

கண்ணன்மாறனார்:—நாகனார் அளவிலாச் சூழ்ச்சியுடையார்; இதற்குள் தங்களை வெளிவிடாதவாறு காத்தற்கு இரவே ஆட்களைஅனுப்பியிருப்பர். தாங்கள் இவ்வுடை யுடன்செல்வது தகாது. இவ்வுடையினை மாற்றி மாறு வேடம் பூண்டு செல்லல் வேண்டும். என்வீடு சென்று என் மகனையும் ஈண்டு விரைவில் வரப்பணிப்பேன். காலதாமதம் செய்யற்க. இனி யாம் இங்கிருத்தலும் இயலாது. இறைவனருளால் வெற்றிபெறின் இனி எனைக் காண்பீர். விடை பெற்றேன், செல்கின்றேன்.

[பங்கயச்செல்வி தயங்கித் தயங்கி நிற்க]

பாண்டிமாதேவி:—அம்மா! இங்குவா. [மகளை முதுகில் தைவந்து] இனியாவது என் சொற்படி நட. தயக்கம் ஏன்? என் ஆண்மகன் என்ன உடுத்திக்கொள். [பங்கயச்செல்வியும் அழுதுகொண்டே உள்ளே செல்கிறாள்]

பாண்டிமாதேவி:—[அழுகையுடன்] இறைவா! என்னை இந்நிலைக்குள்ளாக்கினாய். என் கணவன் இறந்தும் அவர் தள்ளியவற்றை யான் கொள்ள நேர்ந்ததே! சோழன் உறவே கூடாதென்பது அவர்தம் நிலைத்த கொள்கை. அவன் உறவை யானே சென்று தேட நேர்ந்ததே!... என் நாதா! என்னை மன்னிப்பீராக. இக்கற்றுத் தவிக்கின்றேன் ...... என் பிழை பொறுப்பீர் ...... யான் உயிருடனிருப்பின் தங்கள் விருப்பிற்கு மாறாயின என்னென்ன செய்ய நேருமோ? யான் தங்களைச் சென்றடைவேன்......... தங்கள் மகள் பிழை பொறுப்பீர். மன்னித்து இவளை மனமுவந்து அனுப்புவீர். குற்றம் பொறுப்பீர். குறை பொறுப்பீர். மனமார வாழ்த்தி மணாளன்மனைக்கு அனுப்புவீர்......அம்மா! .........எந்நாளுமிலாது நேற்றைற உன்னைக் கண்டித்துக் கூறினேன். உன்னை எங்ஙனம் பிரிவேன்! [அழுகிறாள்]

## கண்ணன் - மாறனார் கருதிய உதவி

## V.

(மதுரை; கண்ணன்மாறனார் வீடு; மாலை.)

[கண்ணன்மாறனார் மனைவி அங்கயற்கண்ணி பாடிக் கொண்டிருக்கிறாள்.]

"பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச்
சுருக்கி மன்பின்
வெற்றடி யேனை விடுதிகண்டாய் விடிலோ
கெடுவேன்
மற்றடியேன் தன்னைத் தாங்குநரில்லையென்
வாழ் முதலே
யுற்றடி யேன்மிகத் தேறிநின் றேன்எனக்
குள்ளவனே."

கண்ணன்மாறனார்:— (உள்வந்து) நன்று பாடினாய்! இப்போது உள்ள என் மனப்பாங்கிற்கு ஏற்றதாயிற்று; நன்று பாடினாய். [அங்கயற்கண்ணி எழுந்து]

அங்கயற்கண்ணி:—நாதா! வருக, வருக: தாங்கள் வருவதாகச் சொல்லவில்லையே.

கண்ணன்மாறனார்:—யான் திடீரென்று வர நேர்ந்தது. நம் மரசரை நாகனார் கொன்றுவிட்டார்.

அங்கயற்கண்ணி:—ஐயோ! ஐயோ!! அரசியார்உயிர்தரியாரே. ஐயோ! என்ன பாடுபட்டாரோ! எம்மரசர் குடும்பத்

னைத்தெய்வம் இப்படியோ சோதிக்க வேண்டும்? ஐயோ! ஐயோ!! ஆ! ஆ! அடுக்குமோ?

கண்ணன்மாறனார்:—நீயும் அழத் தொடங்கினாய்; நீ அழுவதைவிட முக்கியமானவை உள. அழுவதைத் தவிர்; நம்மிளவரசியாரை எங்ஙனமாயினும் காத்தல் நம் கடன். இதற்கு என்ன சொல்லுகிறாய்?

அங்கயற்கண்ணி:—அவர்கட்குழைப்பதைவிட வேறொன்றும் உயர்ந்ததில்லை; யானே சென்று இளவரசியாருடன் எந்நாளும் தங்கியிருக்கின்றேன். விடை கொடுங்கள்.

கண்ணன்மாறனார்:—பேதாய்! நீ சென்றுறைவதால் என்ன பயன். நாகனார் இளவரசியாரைக் கவர்ந்து தன் மகனுக்கு மணம் முடிக்க நினைந்துள்ளார். அதனைத் தடுப்பதே நாம் செய்யத் தக்கது. இதனைக் கருதி இளவரசியாரை உறந்தைக்கு அனுப்ப நினைந்துள்ளேன். பாண்டிமாதேவியும் இதற்கு இசைந்தனர். இளவரசியார்க்கு நம் சிறுவனைத் துணை அனுப்புவதாகக் கூறி வந்தேன். இதற்கு நீயும் உடன்படுவாய் எனக் கருதுகிறேன்.

அங்கயற்கண்ணி:— இதற்கு என்னைக் கேட்கவும் வேண்டுமோ? அரசரால் உயர்ந்தோம் நாம்; அவர்க்கெனில் நம்முயிரையும் கொடுத்தல் தகும். நம் வல்லபனை அனுப்புவதோடு வேண்டுமாயின் யானும் உடன் செல்வேன். வல்லபா! வல்லபா!! [கூப்பிடுகிறாள்.]

கண்ணன்மாறனார்:— நீ உடன் சென்றால் பாண்டிமாதேவியைப் பார்ப்பது யாவர்? நாகனார் இன்னும்

இவ்விடம் சேர்ந்திலர். அவர் ஈண்டெய்திய பின் கொடுமைகள் பல செய்வார் என்பது திண்ணம். யாருக்கு என்ன நேரினும் நீ பாண்டிமாதேவியுடன் இருந்து அவரைக் காத்தல் வேண்டும்; யான் தஞ்சை செல்கிறேன். மீண்டும் யான் வரும்வரை பாண்டிமா தேவியைக் காத்தளிப்பாய். [வல்லபன் வருதல்]

**அங்கயற்கண்ணி**:—வல்லபா! உனக்கோர் பெரும்பணி உன் தந்தை தேர்ந்துள்ளார்.

**வல்லபன்**:—[தந்தையை நோக்கி] தாங்கள் வந்த காரியம் தெரிந்திலேன். எப்பணியாயினும் அப்பணி மறுப்பனே; வலியவாறு ஏற்று முடிப்பேன்.

**கண்ணன்மாறனார்**:—வல்லபா! நம்மரசரை நாகனார் கொன்றார்.

**வல்லபன்**:—ஆ! அவரைக் கொல்வதற்கு ஒருவரில்லையா. இன்னும் அவர் உயிரோடிருத்தலோ தகும். நன்று யிற்று நம் வீரம்! நன்றுயிற்று நாம் அரசர்க்கியற்றும் பணி!

**கண்ணன்மாறனார்**:—வல்லபா பதறேல்; அவரைக் கொல்வது பின்பு கருதுவோம். அது இப்போதியல்வதன்று; நாம் செய்யத்தக்கது வேறொன்றுளது; இளவரசியைக் கவர்வதே நாகனார் கருத்து. அவர் ஈண்டெய்துமுன் இளவரசியைச் சோழன் இளங்கோவிடம் உறந்தைக்கு அனுப்பத் துணிவுகொண்டேளாம்; இளவரசியர்க்கு உற்ற துணை உனையலாது வேறில்லை.

வல்லபன்:—இதனிற் சிறந்த பணியெனக்குண்டோ? இப் பணி தலைமேற்கொண்டேன். இதோ புறப்படுகின் றேன்.

கண்ணன்மாறனார்:— மகனே! இஃது எளியதென்றெணக் கருதேல். நம் பகைவன் திறத்தைப் பலமுறை கருது வாய். வழியில் தடைகள் ஏற்படின் அவைகளை அகற் றிடத் துணைவர் உனக்கில்லை. நீயே யாவும் எண்ணித் துணிவாய். பலமுறை எண்ணிப் பலவிதமும் கருதிப் பயன் தரத்தக்கன கைக்கொள். பயத்தினை அறவே அகற்று. கொண்டன்ன இன்னுவரினும் கொண்டது கைவிடேல். "உயர்குடி யுட்பிறப்பின் என்னும் பெயர்பொறிக்கும், பேராண்மை இல்லாக் கடை".

உன்னுடன்செல்வது இந்நாட்டின் அரசியார் என்பதை அறிவாய். அவர் இருவென இருந்தும், வேண்டுழி அமைச்சரின் மொழிந்தும் உறுகுறை அகற்றுவாய். குறை ஒன்றும் செய்திடேல்.

வல்லபன்:—தாங்கள் மொழிந்தன பொன்னெனப் போற்றுவேன்.

அங்கயற்கண்ணி:—என் மகனே! உன் கூரிய அறிவால் யாவையும் வெல்வாய். அதிருட்டம் உடையார்க்கு எதிர்நிற்பன என்ன? யாவையும் வெல்வாய். வழியிற் போர் செய்ய நேரில் புறங்கொடுத்தேகேல். இம் மண்ணிற் பிறந்தார் யாவரும் எந்நாளாயினும் இறப்பது திண்ணம். போருக்கஞ்சேல்; புறங்கொடுத்தேகேல்; அன்றோர் அன்னை, தன் மகன் போரிடைப் புறங்

கொடுத்தானென அம்மகனுண்ட மார்பினை அறுத்து விடுவேனென ஓடின செய்தி உணர்வாயன்றோ? புறங்கொடுத்தாயெனும் புன்மொழி கேட்டலில், இறந்தாயென்பது இனிமை அளித்திடும். நீ பெரும் புகழ் எய்தற்கு இப்பணி கிட்டிற்று. நீ அறிவுடையாதலின் மேன்பாடடைவாய். உன்குலம் உன்னதாக்கி என் குலம் எனக்கும் ஈவாய்.

என் அருமை மகனே மற்றொன்று குறிப்பேன். அதனையும் அறிந்து செல். உன்னுடன் செல்வது அரசிளங்குமரி. நீ, ஓர் இளங்குமார னென்பதை மறந்துவிடு. உன் அன்னையைப் போற்றுமாறு போற்றுவாய். [அங்கயற்கண்ணி சற்று உள்ளே சென்று, ஓர் சிறு சிமிழுடனும் ஓர் வாளுடனும் வருகிறாள்.]

அங்கயற்கண்ணி:—என் கண்ணே! என்னருகே வா; உன் நெற்றியில் இப்பொட்டினை இடுவேன். (வல்லபன் முழந்தாளிட்டுக் கைகூப்பி வணங்குகிறான். அங்கயற்கண்ணி அவன் நெற்றியில் பொட்டிடுகிறாள்.) என்னருமை மகனே தக்கதே புரிந்து தகைமையால் உயர்வாய். இவ்வாளினைக்கொண்டு செல்.

(வாளினைக் கொடுக்கிறாள். வல்லபன் எழுந்து வணங்கி அதனைப் பெறுகிறான்.) உன் முன்னோர் வாளிது; பற்பல வெற்றியளித்தது. இறைவனருளால் இவ்வாள் உனக்கும் வெற்றியே தரும். வெற்றியே பெற்று விரைவில் மீளுவாய். கடவுளை வணங்கிச் செல்.

கண்ணன்மாறனார்:—நீங்கள் மாறுவேடம் பூண்டு செல்லுதல் வேண்டும். இல்லையேல் நாகனார் ஒற்றர்கள் உங்களை எளிதில் அறிவர். துறவியின் வேடமே தூயதாகும்.

வல்லபன்:—என் தந்தையைத் தாயைத் தக்கோராக்குவேன். தங்கள் சொல்வழி நிற்பேன்.

[வணங்கிச் செல்கிறான்]

கண்ணன்மாறனார்:—அங்கயற்கண்ணி நான் சென்றுவருகிறேன். நீ திடமாகயிரு.

[அங்கயற்கண்ணி ஒன்றும் கூறாது நிற்கிறாள்

கண்ணன்மாறனார்:—ஏன் விடை கொடுக்கிலாய்? வருத்தம் உனக்கேன்? உன் மகனுக்குத் திடம் கூறி யான் செல்வதற்கோ மயங்குகிறாய். உனக்கு என்ன பயம்? எதற்கு வருந்துகின்றனை?

அங்கயற்கண்ணி:—நாகனைப் பகைத்தற்கு நாம் தகுதி பெற்றோமோ? தாங்கள் இப்பெரும் பகை கொண்டதற்கே வருந்துகிறேன்.

கண்ணன்மாறனார்:—நன்று நன்றிது! அவ்வற்பனை நீ ஓர் பெரியார் எனக் கருதினாய். பிறர் பொருள் வவ்வும் பேராசைகொள் நாயின் பகை, என்னை என் செய்திடும்? விடு விடு துயரம். நான் போய் வருகிறேன். நீ சென்று பாண்டிமாதேவியுடன் உறைந்து அவரைத் தேற்றுவாய். உன் உயிர் கெட நேரினும் அவரைக் கைவிடேல்; அவரைக் கைவிடேல். யான் திரும்பும்வரையில் அவரை விட்டகலேல்.

[அங்கயற்கண்ணி அவர் அடியிணைகளை வணங்குகிறாள்]

கண்ணன்மாறனார்:—எழுவாய். நீ ஒன்றுக்கும் அஞ்சேல். [அங்கயற்கண்ணியை முத்தமிட்டு] அரசியைக் கைவிடேல். கைவிடேல். [போய்விடுகிறார்]

# மகளைப் பிரிந்து மனமுடைந் தழுங்கல்

## VI.

[பாண்டியன் அரண்மனை; காலை;]

பாண்டிமாதேவி:—பங்கயச்செல்வி! விரைவில் வருவாய். உடைமாற்றுதற்கு இவ்வளவுநேரமோ. [ஓர் அரசிளங் குமரன்போன்று உடைதரித்து இளவரசியார்வருகிறார்]

பாண்டிமாதேவி:—அம்மா! இங்கு வா. [அழுகிறாள்] முருகக் கடவுளை ஒத்தது உன் தோற்றம். [முத்தமிடுகிறாள்] நீ ஓர் ஆணாய்ப் பிறந்தா யெனின் இத்துன்பெலாம் நம்மை நண்ணுமோ. [அழுகையோடு] கடவுள் ஓர் ஆண் மகவளித்திலர். இவ்வுடையில் உன்னைப் பெண்ணென யாரும் கருதார். முற்றிலும் ஆண் எனத் தோற்றுகின்றனை. பெண்மை தனினும் ஆண்மையே உனக்கு அழகு செய்வது. என் செல்வமே! இங்கு வா. [முத்தமிடுகிறாள்]

[வல்லயன் வருதல்; பாண்டிமாதேவியை வணங்குதல்.]

பாண்டிமாதேவி:—கண்ணனார் மகனோ? ... மகனே வருக! உன் தந்தையைப்போன்ற தோற்றமுடையாய், அவர் போன்ற செய்கையுமுடையாய், என்றது உன் வருகையே காட்டும். நாங்கள் நலமுற்ற நாட்களில் உனக்கு ஓர் நன்மையும் செய்திலோம். கண்மணி! உங்களை அல்லால் எங்களுக்கு யார் துணை. உறந்தைக்குச் செல்லும்வழி உனக்குத்தெரிந்ததேபோலும்.

வல்லபன்:—அம்மணி! அவ்வூர் செல்லும் வழிகள் பலவும் யானறிந்துளேன். அவ்வூர் படை பயில் கழகத்துப் பயின்று முள்ளேன்.

பாண்டிமாதேவி:—அங்ஙனமாயின் நன்று.

வல்லபன்:—இளவரசியார் எங்குளர்? இவ்வரசிளங்குமரர் யார்? மற்றுமோர் துணையே போலும்.

பாண்டிமாதேவி:—அன்று; அன்று; ஐய! இவ்வரசிளங் குமரனே பங்கயச்செல்வி. உன் தந்தை கூறியாங்கு மாறுவேடம் பூண்டுள்ளாள்.

பங்கயச்செல்வி:—அண்ணா பணிகிறேன்.

வல்லபன்:—நன் மதிப்பதனைவேண்டின் நல்லுடை தரிப்ப தாகும்; தப்பியே ஓடுதற்குத் தாழ்ந்த தோர் உடையே வேண்டும். துறவியின் உடையே நாம் கொள்ளுதற் குரியது. துறவியெனில் சிலரே உற்றுநோக்குவர். துறவியின் உடை இதோ கொண்டுவந்துளேன். இதனை அணியுமாறு வேண்டுகிறேன். [கொடுக்கிறான்]

பங்கயச்செல்வி:—அங்ஙனமே அணிவேன்.

[உடையினைப்பெற்று அதனை உடுத்தச் செல்கின்றாள்]

பாண்டிமாதேவி:—என்னருமை மகனே! உன் உடன்பிறந் தாளைக்கொண்டு செல்; உலகமறியாள்; கற்றதன்மை யின் முற்றுமறிந்தாள்போல் பேசுவாள்; அவள் செய் குறை பொறுப்பாய். யான் உனக்கதிகம் கூறுதல் எதற்கு? நீ உயர்குடிப்பிறந்தாய்: வழி வழி வந்த வாய்மையுடையாய்.

வல்லபன்:—அன்னாய்! அரசியாரை யாதும் துயருறுவாறு உறந்தை சேர்ப்பேன். தாங்கள் இதனைக் குறித்துச் சிறிதும் கவலையுறுதல் வேண்டா; இடையூறொன்றும் அணுகா வகையில் காப்பது என் கடன். என்னுயிர் போயினும் இக்கடமை தவறேன்; யான் விடைபெற்றுக் கொள்கிறேன். என்னன்னையின் வருகையை நோக்கி வெளியே காத்திருக்கின்றேன்.

பாண்டிமாதேவி:—[தனியே] பாவியாகிய என்போன்றார்க்கு இத்தகைய நல்லோர் உதவி, தவப்பயனால் கிடைத்தது. வல்லார்க்கும் மாட்டார்க்கும் வலமளிப்பவன் அவனே! திக்கற்றோர்க்குத் தெய்வமே துணை. [அழுகிறாள்] தெய்வங்காள்! வழித்துணை செய்வீர். வேறு யாரை யான் வழித்துணை அனுப்புவேன்.

[பங்கயச்செல்வி துவராடை பூண்டு வருதல்]

பங்கயச்செல்வி:—[அழுகையுடன்] அம்மா! தாங்களும் என்னுடன் வரவேண்டுவேன். அம்மா! தங்களை விட்டு நான் எவ்விதம் பிரிவேன். தங்கள் மகளெனில் தங்களைத் தனியே விட்டுச்செல்வனோ? தங்களுயிரினும் என்னுயிர் பெரிதோ? அம்மா! தங்களைத் தனியே விட்டுப்போக எனக்கு மனமில்லை, அம்மா! அம்மா!! [கதறி அழுகிறாள்] என் குற்றமெலாம் பொறுப்பீர். யான் தங்களைவிட்டுப் போகச்சொல்லா திருக்கவேண்டுகின்றேன்.

பாண்டிமாதேவி:— [அழுகிறாள்] அம்மா பங்கயச்செல்வி! அழாதே, அழாதே; சற்றுத் தேறுதலடைந்த என்

மனம் உன் அழுகையைக் காணத் தளர்கின்றது. அம்மா, அழாதே; என்போன்றனையோ நீ; எனக்கினி யாது போகிலென்; யாது பொருந்திலென்? தலையின் மேற்செல்லும் வெள்ளம் சாண் எனில் நன்றோ? முழம் எனில் நன்றோ? நீ இந்நாட்டிற்கரசி யென்பதை மறந்தனை. பகைவன் உன்னைக் கொல்லவோ கருது வான். நீ, அவன் மகனை மணத்தற்கு இசைவை யோ? உன்னைக் கொல்லாது கொல்வான். என்னை அவன் என்ன செய்யக்கூடும். உன்னோடு பாண்டியன் குடியைப் பாழாக்கவோ நினைத்தாய்; தடை ஒன்றும் சொல்லேல். உன்னால் இந்நாடு நலம் பெறும்; நல் லோர் யாவரும் நலம் பெறுவர். இந்நாட்டின் நலத்தினைக் கருதி என் சொற்படி நட. கணவனை இழந்த நான் அயலிடம் செல்லுதல் தகுமோ? [அழுகிறாள்] என் மனதை இன்னும் புண் செய்யாதே.

பங்கயச்செல்வி:— [அழுதுகொண்டு] நான் போய் வரு கிறேன், அம்மா ... ! அம்மா ... ! போய்வருகிறேன்,

பாண்டிமாதேவி:— [அழுகையோடு] அம்மா! போய் வா. அம்மா! போய் வா.

[பங்கயச்செல்வி சற்று தூரம் சென்று திரும்பி வருகிறாள்]

பாண்டிமாதேவி:— ஏன் செல்வி! திரும்பி வந்தாய்; உன் மனதைத் திடம் செய்து கொள். மனத்திடமில்லாத நீ எங்ஙனம் நாட்டினை ஆள்வாய்.

பங்கயச்செல்வி:—அம்மா! தங்களைப் பணிந்து செல்ல மறந்து விட்டேன்.

பாண்டிமாதேவி:— [அழுகையோடு] அதனால் என்ன.

பங்கயச்செல்வி:—துக்கமும் பிரிவும் என்னறிவை மயக்கின. [பாண்டிமாதேவியின் அடிகளில் வீழ்ந்து பணிகிறாள். அழுகிறாள்] என் குற்றமெல்லாம் பொறுப்பீர். நான் போய்வருகிறேன். [அழுகையுடன்] நான் உங்களை மறுபடி எப்போது காண்பேன் " என்றினி மதுரை காண்பேன்.! எந்தையை என்றுநான் காண்பேன். '.... பிரிந்துபோகக் கால்கூடவில்லையே.

பாண்டிமாதேவி:—[அழுகையோடு] அம்மா! நீ போய்வா; எல்லாம் அமைத்தபடி ஆகும்; போய் வருகிறாயா? அழுதென் செய்வது? ஊழிற்பெறுவலி யாவுள?

பங்கயச்செல்வி:—யான் போய்வருகிறேன். அம்மா! யான் போய்வருகிறேன். [அழுதுகொண்டே போகிறாள்]

பாண்டிமாதேவி:—ஏ, தெய்வங்காள்! இதனிற் கொடிதும் உளதோ? ......... யான் கண்ட கனவும் மெய்யாயிற்று ... ஆ ... ஆ! நான் எதை நினைந்து அழுவேன். இந்நாடு சீர் குலைந்ததற்கு அழுவேனோ, என் கணவனை இழந்ததற்கு அழுவேனோ, என் கன்றினைக் கொண்டு செல்லும் காலத்திற்கு அழுவேனோ. கொடிது கொடிது என் துன்பம். [தலையிலடித்துக் கொள்கிறாள்] இவ் விடரெலாம் எங்ஙனம் தாங்குவேன். ஆ பாதகா! பாவி! [கீழே விழுகிறாள்; பணிப் பெண்கள் ஓடித் தூக்குகின்றனர்.]

## மாறனைத் தேடும் படையார்தம் செயல்.

## VII.

[மதுரை; கண்ணன்மாறனார் வீடு; நண்பகல்:
கதவு அடைத்திருக்கிறது. சிறு படைத்தலைவனொருவன்
சில படையாளர்களுடன் சுற்றிப்பார்க்கிறான்.]

தலைவன்:— *நன்றாகச் சுற்றிப்பாருங்கள். மூலை முடுக்குகள், உட்புறம், வெளிப்புறம், எங்கும் தேடுங்கள். அரசர் நம்மைத் தண்டிப்பார். அவர் வருவதற்குள் நாம் அவரைப் பிடித்துவிடவேண்டும். அல்லது அவரை வெளியேறவிடாது பார்த்துக் கொள்ளவேண்டும். கதவைத்திறக்கச்சொல்; கதவைச் சாற்றிக்கொண்டால் விட்டுவிடுவோமா? இதனால் நாம் ஏமாந்துவிடுவோமா? கதவைத் திறக்கிறார்களா என்ன?*

ஓர் படையாளன்:—*யார் உள்ளே கதவைத் தொற (கதவை இடிக்கிறான்)*

மற்றோர் படைஞன்:—[*தலைவனை நோக்கி*] *ஐயா! இவரு முன்னியே ஓடிப்போயிருந்தால் என்ன செய்யிரது?*

தலைவன்:—*அதற்கென்ன செய்வது; இராத்திரியே போகச் சொன்னார்; தூக்கம் என்னையறியாமல் வந்துவிட்டது; வழியில் சற்று உறங்கி விட்டேன்; அவர் எங்குத் தப்புவது? ஊரைச்சுற்றியுள்ள பாதைக்கெல்லாம் ஆள் அனுப்பியிருக்கிறேன். வையையிலோ பெருவெள்ளம். ஒவ்வொரு பாலத்திற்கும் ஆட்கள் அனுப்பி யிருக்கிறேன்.*

படைஞன்:—அவர் வீட்டுக்கே வராமே, அரமனையிலே ஒளிஞ்சிருந்தா, இங்கே தேடி என்ன பண்ணுரது?

தலைவன்:—தான் வரும் வரையில் அரண்மனையில் ஒரு ஆரவாரமும் செய்யக்கூடாதென்பது அரசர் உத்திரவு. அரண்மனையை விட்டு ஒருவரும் வெளியேருமல் பார்த்துக்கொள்ளும்படிதான் நமக்குக் கட்டளை. அதற்கு முன்பே ஆள் அனுப்பி விட்டேன். சீக்கிரம் தேடுங்கள். நாமும் அங்குச் செல்வோம்.

படைஞரில் ஒருவன்:—நான் என்ன கத்தியும் கதவைத் தொறக்க ஒருவரும் பேசலை. கதவை ஒடைக்கவா ? உத்தரவு.

தலைவன்:—மறுபடியும் ஓர் முறை கூப்பிடு கதவைத் திறக்காவிட்டால் கதவு உடைபடும் என்று சொல். கதவைச் சாத்திக்கொண்டிருந்தால் விட்டுவிட மாட்டோம் என்று சொல்.

ஓர் படைஞன்:— [கதவை மறுபடியும் இடிக்கிருன்] உள்ளே யார். கதவைத் தொற. இல்லாட்டி கதவு ஒடைபடும். தலை போகும். கதவைத் தொற.

தலைவன்:—இவர்கள் அகம் கொண்டவர்கள். தானே கதவைத் திறக்கமாட்டார்கள். மாறனுரில்லை என்ருல் அவர் மனைவி எங்கே ? மகன் எங்கே ? இவர்கள் என்னை ஏய்ப்பதற்குப் பார்க்கிருர்கள். இவர்கள் மண்ணுய்ப் போகும் காலம் வந்துவிட்டது. இதற்கே இவர்கள் இப்படிச் செய்கின்றனர். அடே! ஒருவன் மதில் ஏறிக் குதி. உள்ளே யார் இருந்தாலும் வெளியே

கொண்டுவா. யாராயிருந்தாலும் சரி, நம்மை மதிக்காதவர்களை நாம் எப்படி மதிப்போம். போ உள்ளே. கதவைத் திற, யார் உள்ளே யிருந்தாலும் வெளியே இழுத்துவா.

படைஞன் ஒருவன்:—பரபரண்ணு இழுத்து வா, நாங்கள் பாக்கணும்.

[இரண்டு படையாளர்கள் மதிலேறிக் குதிக்கின்றனர். உள்ளே தேடி விட்டு மீண்டும் திரும்பி வருகிறார்கள்.]

ஓர் படைஞன் :—எல்லாக் கதவும் பூட்டியிருக்கின்றன; உள்ளே ஒருவருமில்லை.

தலைவன்:—மூடர்களே! நீங்கள் வீரமற்றவர்கள், செயலற்றவர்கள். உங்களை யார் படையில் சேர்த்தது? தின்பதைத்தவிர உங்களால் என்ன ஆகும்? கதவுகள் பூட்டியிருந்தால் உடைப்பதற்கென்ன? நீங்கள் சொல்வதை நான் நம்பமுடியாது. நான் இதோ அவர்களைப் பிடித்து வருகிறேன் பாருங்கள். [போகிறான்]

## VIII

[மதுரை ; நாகனூர் விடுதி ; மாலை.]

நாகனூர்:—[*தனியே*] *என்னிலும் சமர்த்தனும் இங்கே யிருக்கிறான்! சற்று தாமதம் செய்தது தவறாய் முடிந் தது; கண்ணன்மாறனைத் தப்பவிட்டது தவறு... இளவரசி இதற்குள் தப்பி இருக்க முடியுமா?... தப்பி னார் என்று ஒற்றர்கள் கூறியது உண்மையாகுமோ?... தப்பியிருந்தால் என் எண்ணமெலாம் தொலைந்தது... தாமதம் செய்தது என்மேல் தவறு... என்னால் இக் கொலை நடந்ததென்பதை மாற்ற முயன்றேன்.... நான் இதைச் செய்தேன் என்று, சிற்றரசர்கள் நினைத்து விட்டால் என்னை எப்படி நம்புவார்கள்? அவர்களுதவி யும் கொஞ்ச காலத்திற்காகிலும் வேண்டியதுதான். என்னைச் சந்தேகப்பட்டால் எப்படியும் என்னைக் கவிழ்ப்பர்... நால்வகை உபாயத்தினால் வெல்லமுடியாத வர்களுமுண்டோ? பல சிற்றரசர்கள் எளிதில் என் வசப்பட்டார்... பெண்பிள்ளைகள் என்று இவர்களை நான் நினைத்தது தவறு... கண்ணன்மாறனார் வேலையே இது... இளவரசி எங்கிருக்கிறார் என்று தேடுவதில் இனிப் பயனில்லை. இன்னும் அவர் வெளியேறாவிடில் எப்படியும் என் கையிலகப்படுவார்... எப்படியாவது அவர் மனதைத்திருப்பி என் கருத்தை முடிப்பேன்...*

நான். எனக்குமுன் அனுப்பிய படைத்தலைவன் இன்னும் வரவில்லை. உள்ளூரானுக்கு உளவுதெரியுமென்று நான் இவனை இங்கனுப்பியதும் தவருயிற்றே ... என் ஆட்கள் சிலரையும் அவர்களுடன் அனுப்பினேன்; அவர்களும் வரவில்லை.

ஒற்றர்கள் சொன்னவழியே ஓர் சிறு படையும் அனுப்பியுள்ளேன். அவர்களும் திரும்பி வந்தார்களில்லை... வழிதெரியாது திகைக்கின்றனரோ? அன்னியர் நாட்டில் நான் படும் அவதியில் இது ஒன்று.

[சேவகன் ஒருவனைக் கூப்பிடுகிருர்.]

ரெங்கையா! ரெங்கையா!

[சேவகன் வருகிருன்]

நாகனுர்:— யாரும் என்னைத்தேடி இங்கு வந்ததுண்டோ?

ரெங்கையா:— இல்லை. ஒருவரும் இங்கு வருவதை யான் காணவில்லை.

நாகனுர்:— யார் என்னைத் தேடிவந்தாலும் உடனே வரச்சொல்.

[சேவகன் போய்விடுகிருன்].

நாகனுர்:—(தனியே) இவர்கள் தப்பியோடியிருந்தால் உறையூருக்குத்தான் சென்றிருப்பார்கள். காலதாமதமில்லாமல் யான் ஒரு சிறு படையுடன் அங்கு செல்லவேண்டும். ஆ! தப்பியிருந்தால் என் எண்ணமெல்லாம் முடியாமற் போகுமே! ... படையெடுத்துச் சோழன் மீது சென்ருல் விஜயநகரத்தரசர் என்னை அரசனுவ

தற்கு விடுவாரோ ... ஒரு நாளும் விடார். சிற்றரசர்களின் பொருட்டே நான் படை எடுத்துச் சென்றதாகக் காண்பிக்கவேண்டும். ஆ! என் எண்ணமெல்லாம் வீணாகப்போகுமோ? சிற்றரசர்கள் என்ன செய்யினும் செய்க என்று நான் அன்றிரவே இங்கு வாராமற் போனது தவறாய் முடிந்தது ... இவர்கள் தப்பிவிட்டார்களென்பது நிச்சயமாகு முன் நான் ஏன் இதை நினைந்து வருந்த வேண்டும் ... ஒற்றர்கள் கூறியது பொய்யாகுமோ? நான் அனுப்பிய படைத் தலைவன் இன்னும் வரவில்லை. ஆ! அவனை நாம் என்ன செய்யலாம்.

[சிறுபடைத்தலைவன் வருகிறான், நாகனாரை வணங்குகிறான்]

நாகனார்:—வந்துவிட்டாயா? நல்லதாயிற்று; நல்லதாயிற்று; இளவரசியைத் தப்பிப்போக விட்டு விட்டாயல்லவா? இதற்கோ நான் உன்னை அனுப்பினேன்? நன்றாயிருக்கிறது உன் காரியம்!

சிறுபடைத்தலைவன்:— அரசே! இல்லை; இல்லை; இவர்களை நான் தப்பவிடுவேன் என்று தாங்கள் நினைக்கிறீர்களோ? அப்படிச் சந்தேகிக்க வேண்டாம். என்னை நம்புங்கள். நான் தங்களுக்கு உண்மையாக நடப்பவன். நான் வந்தது முதல், இங்குள்ள படையாட்களை ஒன்று சேர்த்து அரண்மனையைச் சுற்றிலும் காவல் செய்திருக்கிறேன். தாங்கள் வேண்டுமானாலும் பார்த்துக் கொள்ளுங்கள்.

நாகஞர்:—மூடா! அவர்களை ஓடவிட்டுவிட்டு ஒருவருமில்லா வெறும் அரண்மனையைக் காவல் காக்கிறீர்களோ? கண்ணன்மாறனார் எங்கே? அவரை ஏன் சிறைசெய்ய வில்லை?

சிறுபடைத்தலைவன்:—அரசே! அவரைக் காணமுடியவில்லை; அவர் மதுரைக்கு வராமலே ஓடியிருப்பாரென்று நினைக்க வேண்டியிருக்கிறது. அவர் வீடு பூட்டியிருக்கிறது. கதவுகளை உடைத்தும் பார்த்தோம். அங்கு ஒருவருமில்லை. அவர் இங்கு வந்திருந்தால் எங்கள் கையிலகப்படாமல் தப்ப முடியுமா ?

நாகஞர்:—என்னை நீ மூடனென்று நினைத்தாயா ? அல்லது ஏமாற்றலாம் என்று நினைத்தாயா ? கண்ணன்மாறன் மதுரைக்கு வராவிடில் அவன் மனைவியும் மகனும் எப்படித் தப்பியிருக்கமுடியும். வீட்டில் ஒருவருமில்லை என்றும் கூறினாய். உன்னை யான் எப்படி நம்புவது. உன்னுடைய கருத்து மோசக் கருத்தென்பது நன்றாக வெளியாகிறது. நீங்களும் உடந்தையாக யிருந்து இளவரசியை அனுப்பிவிடுவீர்களோ என்று நான் சந்தேகங் கொண்டபடியே ஆயிற்று! நீங்களும் உடந்தையாயிருந்தே இளவரசியை அப்புறப்படுத்தியிருக்கிறீர்கள். நீங்கள் பெரும் மோசக்காரர்கள், நான் உங்களை நம்பியது தவறு. [அத்தலைவனைப்பார்க்காது திரும்பிக்கொண்டு] மோசக்காரனாகிய "இவனுக்கு வேலையில் உயர்வு வேண்டுமாய்! போ என் முன் நிற்கவேண்டாம். உன்

முகத்தில் விழிப்பதே பாவம். போ; என் முன் நிற்க வேண்டாம்.

சிறுபடைத்தலைவன்:— அரசே! என்னை நம்புங்கள். நான் தங்களுக்கு வஞ்சனை நினைக்கவில்லை. இது உண்மை. நான் எங்கே வேண்டுமொனாலும் சத்தியம் செய்கிறேன்.

[சிறுபடைத்தலைவன் முகத்தைப் பாராது திரும்பியபடியே]

நாகனார்:—இது உண்மையா? நீ சத்தியம் செய்வாயா?

சிறுபடைத்தலைவன்:—ஆம் உண்மை, உண்மை; எங்கு வேண்டுமாயினும் சத்தியம் செய்கிறேன்.

நாகனார்:—உண்மையாயின் எனக்குச் சத்தியம் வேண்டிய தில்லை. நான் வேண்டுவது இளவரசியே. இளவரசியை என் முன் கொண்டுவா. இல்லையானால் உங்களை நான் என்ன பாடு படுத்துகிறேன் பார்.

சிறுபடைத்தலைவன்:— அரண்மனையைச் சோதனை செய்ய உத்தரவு செய்யுங்கள். அரண்மனையில் தொந்தரவு செய்யக்கூடாதென்று தாங்கள் சொன்னதால், நாங்கள் இதுவரையில் அவர்களைப் பிடிக்கமுடியவில்லை. இல்லாவிட்டால் அரசர் வருமுன் அவர்களைப் பிடித்து வைத்திருப்போம்.

நாகனார்:—நீ நல்ல பாசாங்குக்காரன். இதனாலே எல்லாம் தவறிப்போய்விட்டது. இப்பொழுதே போய்ச் சோதனை செய், உன் செயலைப் பார்க்கிறேன். பாண்டிமாதேவியும் அவர் மகளும் இன்னுமிருப்பார்களானால் அவர்களை நீ ஒன்றும் துன்பம் செய்ய வேண்டாம், அவர்களிருக்கிறார்களென்பதை எனக்கு

உடனே தெரிவிக்கவேண்டும். யான் அவ்விடம் வந்து அதன் மேல் செய்ய வேண்டியவற்றை நானே செய்வேன். மற்றவர்களை நீங்கள் என்ன செய்யினும் எனக்கு அதைப்பற்றிக் கவலையில்லை.

சிறுபடைத்தலைவன்:—நான் அப்படியே செய்வேன்.

நாகனூர்:—நான் உன்னை இன்னும் நம்புதற்கு முடியவில்லை. நான் யார் என்பது உனக்குத் தெரியுமோ? நான் நாகன் என்பதைத் தெரிந்துகொள். உன்னைக் கொத்திக் கொல்வேன். உன் மோசங்களை எல்லாம் அரை நொடியில் கண்டுபிடிப்பேன். நீயும் உன் ஆட்களும் இளவரசியிருப்பிடத்தை எனக்குக் காண்பிக்க வேண்டும். உங்கள் நடத்தையை நான் உற்று நோக்கி வருகிறேன். நீங்கள் மோசக்காரர்கள் என்று அறிந்தால் உங்களை வேலையிலிருந்து நிறுத்துவதோடு விடேன், தூக்கிலிட்டுக் கொல்வேன். இளவரசியைக் காணுமுன் உன் முகத்தைப் பார்க்க எனக்கு மனம் கூசுகிறது. என் முன் நிற்கவேண்டாம். போகலாம்.

[சிறு படைத்தலைவன் போய்விடுகிறான்]

இளவரசி தப்பி ஓடியிருந்தால் எங்கு தேடிச் செல்வது?......வழிதெரியா நாட்டில் எப்படி வழிதெரிந்து தேடுதல் கூடும்? ... இந்நாட்டாரை எப்படி நம்ப முடியும்......தேடித் திரிவதில் பயனில்லை......உறையூரன்றி வேறெங்கும் போயிருக்கமுடியாது......உறந்தையைத் தாக்குவதே சிறந்தது......விஜயநகரத் தரசருக்கு இவைதெரியவரின்......ஆ! என்புத்திரியை இழந்தேன்......என் புத்திரியை இழந்தேன்.

## தவவேடத்தால் தப்பிப் பிழைத்தல்

## IX

[வைகைக்கரை ஓரம்; ஓர் பாதை; இரவு தொடங்கும் நேரம்; பங்கயச்செல்வியும் வல்லபனும் போகிறார்கள்.]

பங்கயச்செல்வி:—அண்ணா! என் கால்கள் நோகின்றன. நடக்கும் செயல் குறைந்தது. இன்னும் எத்துணை தூரம் செல்லவேண்டுமோ?

வல்லபன்:—இன்னும் சிறிது தூரமே உள்ளது; சற்று விரைவில் வரவேண்டுகிறேன். நாகனாரின் படையாட்கள், வழியிலுள்ள ஊர்களில் தேடிக்கொண்டு இப்பக்கம் சிலர் வருவதாக என் நண்பன் ஒருவனால் உணர்ந்தேன். சற்று விரைந்து நடத்தல் நலமாகும். அங்குள்ள மூங்கிற் பாலத்தின் வழியே அக்கரை செல்வோம்.

பங்கயச்செல்வி:— இத்துறவியுடை எனக்குச் சற்றும் பொருந்தவில்லை; துறவியைப்போன்று நடிக்கவும் எனக்குத் தெரியவில்லை. என்னுடன் யாரும் உரையாடின் யான் உண்மையில் துறவியல்லவென்பதைக் கண்டுகொள்வார்.

வல்லபன்:—துறவால் உயர்ந்ததும் இந்நாடு; துறவால் கெட்டதும் இந்நாடு; துறவிகள் வேடமே நம்மைக் காத்தது; காலத்திற்கேற்ற வேடமே இது; இதனாற் கெடுவோமென எண்ணுதற்கில்லை. தாங்கள் துறவியேபோன்று பேசுதற்கு இயலவில்லையாயின் மௌனங்கொள்க. மௌனமும் ஓர் வகைத் துறவியர் செயலே. சமயத்திற்

கேற்பன யானே பேசுவேன். யான் மற்றோருடன் பேசுங்கால் நீவிர் வாய்பேசாதிருந்து நும்மைக் குறித்து யான் சொல்வனவற்றிற்கேற்பக் கைக்குறி காட்டுவதோடு அமைவீர். அஃதும் இன்றேல் நலமே. இப்பாலத்திலும் இருவர் காவலர் உளர். யான் முன்பு சென்று அவர்களுடன் பேசி, அவர்கள் மனப்பாங்கை அறிந்தபின் தம்மை வரும்படி குறிப்புக் காண்பிக்கின்றேன். நீவிர் அதன் பிறகு சற்றும் நில்லாது பாலத்தின் வழியே விரைந்து சென்றுவிடுவீர். அதுவரையில் இங்குத் தங்கி மெய்வருத்தம் தீர்ப்பீர்.

பங்கயச்செல்வி:—வாய் பேசாது மௌனத்திருக்கும் துறவியர் என் தந்தைபால் வந்துளதைக் கண்டுளேன். ஊமைகள் போன்று அவர்கள் குறிப்பால் உரையாடுவதை யான் அறிந்திருக்கின்றேன். யான் அவர்கள் போன்று நடித்தல் கூடும். அதிற் பிழையொன்றும் செய்யாதிருக்க முயலுவேன். ஆயினும் என் செய்கையால் தங்களுக்கு இடையூறு நேரா திருக்குமாறு யான் செய்யத்தக்கன யாவும் முன்பே கூறுமாறு வேண்டுகிறேன். இக்கந்தைகளையும் இச்சிப்பிகளையும் கல்லையும் மண்ணையும் ஏனோ சுமந்து செல்லுதல் வேண்டும். நாம் நடப்பதே துன்பம் தருவதாயிற்று; இவைகளைச் சுமந்தும் செல்ல வேண்டுமோ? இவைகளை இங்கே எறிந்து செல்வீர்,

வல்லபன்:—கந்தையும் சிப்பியும் கல்லும் மண்ணும் தொந்தரவெனவோ நினைத்தீர்? இவையே நம்மைக் காப்பன காண்பீர். யான் போகின்றேன். யான் குறித்தவாறு நடக்கவேண்டுவேன். இக்காவலர்கள் தங்களைக்காணுதவாறு சற்று மறைவாகவிருந்து யான் குறிப்பதை நோக்கியிருப்பீராக. [போய் விடுகிறான்]

## காவலாளரைக் கடந்த வஞ்சகம்

## X

[வைகைக்கரை; மூங்கிற்பாலத்தை இருவர் காவலர் காத்திருக்கின்றனர்; இருள் தொடங்கும் நேரம்; வல்லபன் போதல்]

காவலாளர்களிலொருவர்:—*அடே! யார் போகிறது நில்.*
*[வல்லபன் நிற்கிறான்; காவலாளனொருவன் அருகே சென்று வல்லபனை உற்றுப்பார்க்கிறான்.]*

காவலாளன்:—*என்ன சாமி! இந்தத்திருமேனியின் தேசம் இந்தத்தேசம் இல்லைபோல் தெரிகிறதே.*

வல்லபன்:—*நன்று பரீக்ஷிக்கட்டும்.*

காவலாளன்:—*சுவாமிகள் பிராமணத் திருமேனியோ? எங்கு செல்பவர்? எந்தவூர்? பெயரென்ன?*

வல்லபன்:—*தீர்க்க மங்களமுண்டாகட்டும். இவன் திருநாமம் திருவடி யென்று சொல்லுவார்கள். இவன் கர்ம சரீரம் தக்ஷணத்தில் உற்பத்தியானபோதிலும் இவன் உத்தர தேசத்து சாதுக்களையே ஆச்சாரிய ஸ்வாமிகளாகக் கொண்டவன். இவன் சந்நியாசி ஆஸ்ரமம் பூண்டவன். சந்நியாசி ஆஸ்ரமம் பூண்டவனுக்கு வர்ணாஸ்ரம தர்மம் ஏது? இவன் அதி வர்ணாஸ்ரமி, இதெல்லாம் ஏன் ஸ்வாமி கேட்கிறது. இதோ இம் மூட்டை நன்று திருக்கண் சாத்தட்டும்.*

காவலாளன்:—*ஸ்வாமி எந்த ஊர் என்று தெரியவேண்டும்?*

வல்லபன்:—இவனுக்கு ஏன் சிரமம் கொடுக்கிறீர் ? ஸ்வாமி ஏன் இதெல்லாம் கேட்கிறீர்கள்? இவன் ஊர் எதானுலென்ன ? தேச சஞ்சாரம் செய்கிற இவனுக்கு, எல்லாம் இவன் தேசம். எல்லாம் இவன் ஊரே. இவன் ஜனித்த ஊர் வேண்டுமோ ? அது திருக்கண்ணமங்கை என்று சொல்வார்கள். இவன் ஜனித்ததுதான் அங்கே. இவன் வளர்ந்து அபிவிருத்தியடைந்ததெல்லாம் உத்தர தேசம். இவன் பூர்வ புண்ணிய விசேஷத்தால் ஓர் பிராம்மண குரு, அதிபால்யமுள்ளவராய் இவனுக்குக் கிடைத்தார். அவரோடு உத்தரப் பிரதேசமெல்லாம் சஞ்சாரஞ் செய்தான். மஹா சிரேஷ்டரான குருபகவான் இவனுக்குக் கிடைத்திருந்தும் பூர்வ கர்மம் விடுகிறதோ? ஜென்ம வாசனை ... பிராப்தப்படிதானே எல்லாம் சித்திக்கும். இவனுக்கு ஜன்ம பூமியைப் பார்க்க கிஞ்சித் சபலம் உற்பவித்தது. எப்பொழுது இந்தச்சபலம் ஏற்பட்டதோ அதை அநுபவித்தே தீரவேண்டுமென்றோ? இல்லாமற்போனாலோ அது ஜன்ம ஜன்மமும் பின்தொடருமன்றோ! குருபகவானும் அப்படியே அனுக்கிரகித்தார். குருபகவானையுமழைத்துக்கொண்டு இத்தக்ஷிணதேசத்தை பிரதக்ஷிணம் செய்துகொண்டு இவன் வருகிறான். ஓர் அத்தியாவஸ்யமான காரியமாக இவனை முன்னே போகும்படி குருபகவான் ஆக்ஞாபித்தார். ஆஹா! அவர் ஸ்ரீ உடையவருக்குச் சமானம்; அதிதூதர்; மஹா தபசி; மஹா புருஷர்; சதா மௌனி; ஹரிகி (குருவிருக்கும் திசையை நோக்கி நமஸ்கரிக்கிறான்.) ஸ்வாமிகள்

நேரில் பார்த்தால் அவருடைய நிஜஸ்சொரூபம் பிரத்யக்ஷமாகும்; ஞானம் சித்திக்கும்; பூர்வ கர்மா தொலையும்; கிருதார்த்தராகலாம்; ஜென்ம சாபல்யமாகும்.

காவலாளன்:—ஸ்வாமி எங்களுக்கு ஞானமும் வேண்டாம்; ஒன்றும் வேண்டாம்; அவரைப் போய் நாங்கள் பார்க்க முடியாது; எங்கள் வேலை பெரிது; இவ்விடத்தை விட்டு அப்பால் போனால் எங்களைத் தண்டிப்பார்கள்.

வல்லபன்:—அதற்கென்ன, ஆஹா, நீங்கள் மகா புருஷர்கள். கிரகஸ்தாஸ்ரமிகளுக்குக் கர்ம ஞானமே அவஸ்யம். நிஷ்காமிய கர்மிகள்; பகவான் பகவத்கீதையில் நிஷ்காமியகர்மத்தைத்தானே சிரேஷ்டமாகஉபதேசித்தார். ஆஹா! ஆஹா!! திவ்யம்! திவ்யம்!! மஹா புருஷர்கள்! அதற்கென்ன தாங்கள் வேலையை விட்டுப் போகலாமோ? குரு பகவான் சர்வக்ஞர் அன்றோ? இங்கு நாம் பேசிக்கொண்டிருப்பது எல்லாம் அவருக்குத் தெரியும். ஸ்வாமிகள் அவரைப் பார்க்கவேண்டும் என்று கிஞ்சித் அபேக்ஷையுண்டானால் அவரே பிரத்யக்ஷமாவார்.

மற்றொரு காவலாளன்:— உத்தர தேசத்து ஸ்வாமியானால் வெகு சங்கதிகள் தெரியுமடா. ஸ்வாமி! தாங்கள் சொல்லட்டும். ஞானமாவது கினமாவது; எங்களுக்கு வேண்டாம். இன்னும் என்ன தெரியும்.

வல்லபன்:—ஆஹா! குருபகவான் சர்வக்ஞர். அவருக்குத் தெரியாதது ஒன்றுண்டோ. அவர் மஹா ஜோஸ்யர்; ஆந்திர திராவிட சாஸ்திரங்களில் என்ன இருக்

கின்றன. பிரபல சமஸ்கிருத சாஸ்திரங்கள் எல்லாம் கரை கண்டவர். பிருகத் ஜாதகம் என்ன, ஹோரா, சாஸ்த்ரமென்ன, எல்லாம் தலைகீழ்ப் பாடம். ஜ்யோதிஷகணிதத்தில் மஹா நிபுணர்; கிரகஸ் புடம், பாவஸ் புடம், எந்தஸ்புடம் வேண்டுமானாலும் திவ்யமாக க்ஷணத்தில் கெணிப்பார். பலன்கள் சொல்வதில் மஹா சிரேஷ்டர்.

ஒரு காவலாளன்:— இதற்கெல்லாம் ஆசைப்பட்டு என்ன செய்கிறது? எங்கள் முன்னோர்கள் எங்களுக்கு ஜாதகம் கணிக்காமல் விட்டுவிட்டார்களே.

வல்லபன்:—ஆஹா! குருபகவான் பிரபல சித்த ஆயுர்வேத வைத்திய சாஸ்திரி. மஹா வைத்திய சாஸ்திர நிபுணர். அவர் வைத்திய முறையோ திவ்யம் திவ்யம். சித்த முறை என்ன, தந்வந்திரி முறைகள் என்ன, யூனானி முறைகளென்ன, எல்லா முறைகளும் அவருக்கு ஸ்பஷ்டமாகத் தெரியும். அவர் ஔஷதிகளின் ஞானப் பிரபாவமே பிரபாவம். இவைகளைக் கொஞ்சம் பாருங்கள் (தன்னிடமிருந்த ஒரு பையை அவிழ்க்கிறான்.) இது மஹாரத்வஜம், இதோ சண்டமாருதக் குழம்பு, இதோ அகஸ்தியர் குழம்பு, இப்பக்கத்திலிருப்பவை லேகிய வகைகள், இவை செந்தூர வகைகள், இவைகள் பஸ்மங்கள்.

காவலாளரில் ஒருவன்:—இதெல்லாம் சரி. வாதம் செய்யத் தெரியுமா ?

வல்லபன்:—பேஷ்; பேஷ்; நன்றாகக்கேட்டீர். நீங்கள் நல்ல விஷய ஞானமுடையவர்கள். வைத்தியனைப் பரீக்ஷிக்க

வேண்டுமானால் வாதத்திலன்றே பரீக்ஷிக்கவேண்டும்; வைத்தியத்தில் தங்களுக்கு விசேஷ ஞானமிருக்கும் போலிருக்கிறது. 'ஸ்வாமிகளிடத்தில் இனி ஜாக்கிரதையாகப் பேசவேண்டும். விஷய ஞானமுள்ளவர்களிடத்தில் எதையும் ரகசியமாக வைக்கக்கூடாது. தங்களிடத்தில் யதார்த்தத்தைச் சொல்லிவிடுகிறேன். வாதம் தெரியாத உத்தரதேச ஸ்வாமிகளுமுண்டோ? வாதம் சித்திக்கவேண்டுமென்றால் முப்பு சித்திக்க வேண்டும். அதில் ஒரு திரணம் எடுத்து எவற்றில் போட்டாலும் அவை எல்லாம் சொர்ணமாகும். அது முடிக்கத்தான் இப்போது போகின்றோம். இதோ எதிரே தெரிகிற திருவேடகத்தில் ஓர் ஒஷதி யிருக்கிறது. அது பரம ரஹஸ்யமானது. அதற்கே குரு ஸ்வாமி இப்பொழுது போவார். வானத்தைப் பார்க்கிறான்.

[பங்கயச் செல்வி வரவேண்டும் என்ற குறிப்புத் தோன்ற] அந்த நக்ஷத்திரம் அவ்விடமிருந்து இவ்விடம் வரும்பொழுது [ஆகாயத்தில் ஓர் இடத்தைக் காண்பிக்கிறான்.] அங்கிருந்து இங்கு குரு வரவேண்டும் அப்போது தான் புடம் வைக்க வேண்டும். அது வரையில் குருஸ்வாமி யோகத்திலிருந்து எக்கும் செய்து அவிர்ப் பாகம் இட்டு அவ்வோஷதியைப் பறிப்பார். அதற்கே தர்ப்பைகள், சமித்துகள் இவைகளை இவன் சுமந்து செல்கின்றான். இவை எல்லாம் சேகரிக்க நேரமாயிற்று. [சற்று கண்ணை மூடி நிற்கிறார்.] இப்பொழுது குருபகவான் வருவாரென்று நினைக்கி

றேன். (திரும்பிப் பார்க்கிறான்) ஆஹா குருபகவான் வந்து விட்டார். ஆஹா என்ன திவ்ய ஞானம். வருவார் என்று இவன் சித்தத்தில் தோன்றியவுடனே வந்து விட்டார்; இதோ பாருங்கள் வருகிறார்; எழுந்திருங்கள்; இப்படி வாருங்கள்.

[பங்கயச் செல்வி வருகை]

வல்லபன்:—குரு மஹாராஜ் நமஸ்காரம்: [காவலாளர்களைக் கூப்பிடுகிறார்] ஸ்வாமிகள் இப்படி எழுட்டும்; குரு தேவருக்குத் தண்டம் சமர்ப்பியுங்கள். [வல்லபன் குருவை நோக்கி] ஏலோக் அச்சே ஆத்மியா [இவர்கள் நல்லவர்கள்] ஏலோக் தேவ்சேப்யாரே [இவர்கள் தெய்வ பக்தியுள்ளவர்கள்] ஏலோக்கி நேக்கி கர்ணே [இவர்களுக்கு நன்மை செய்யவேண்டும்.] [குரு ஸ்வாமி சற்று நிற்கிறார். காவலாளர்கள் எதிரே சென்று நமஸ்கரிக்கப் போகிறார்கள்.]

வல்லபன்:—இவர்கள் குருதேவருக்கு நமஸ்காரம் செய்யும் முறைமை தெரியாதவர்கள். குருதேவர் இவர்களைச் சபித்து விடக்கூடாது. [காவலாளர்களை நோக்கி] ஸ்வாமிகள் குருதேவருக்கு முறைப்படி நமஸ்காரம் செய்யவேண்டும். இல்லாவிடில் அவர்கள் அநுக்கிரகத்திற்குப் பாத்திரர் ஆகமாட்டீர்கள். குருஸ்வாமியைச் சுற்றிவந்து நமஸ்கரியுங்கள். [அப்படியே காவலாளர்கள் சுற்றிவருகிறார்கள்; நமஸ்கரித்து எழுந்திருக்கிறார்கள்; குருஸ்வாமி கையமர்த்தி ஆசீர்வதிக்கிறார்]

வல்லபன்:—சற்று விலகிக்கொள்ளுங்கள். [காவலாளர்கள் விலக, குருஸ்வாமி பாலத்தின் வழியே போகிறார்.]

வல்லபன்:—மகான்களே! நீங்கள் கிருதார்த்தரானீர்கள்; உங்கள்ஜன்மம் சாபல்யமாயிற்று; குருமகாராஜ் அதிதி; மௌனி; இந்த அபயஹஸ்தம் யாருக்கும் அளித்த தில்லை; இனி நீங்கள்நினைத்தபடி எல்லாம் சித்தியாகும். உங்கள் மனதில் என்னென்ன குறைகளுண்டோ அவையெல்லாம் நிவர்த்தியாகும். மேன்மேலும் உத்தியோகம் அபிவிர்த்தியாகும். ராஜக்கிருபைஉண்டாகும்.

காவலாளரில் ஒருவன்:—ஸ்வாமி இப்படி வரவேண்டும்; [வல்லபன் காதோடு சொல்லுகின்றான்] அவனுக்குத் தெரியாமல் நான் சொல்வதைக் கேட்கவேண்டும். [மற்றொரு காவலாளனை நோக்கி] இருட்டாகிவிட்டது. நீ போய் சாப்பிட்டு வா. நான் அதுவரையில் காவலிருக்கிறேன். [வல்லபனும் காவலாளனும் தனியே பாலத்திறோரம் செல்கிறார்கள்.]

வல்லபன்:—சொல். உனக்கென்ன சங்கோசம்.

காவலாளன்:—இல்லை சுவாமி. நான் மூன்று மனைவிகளைக் கலியாணம் செய்திருக்கிறேன். என்னமோ ஆசை; ஒன்றின்மேலொன்றாகக் கலியாணம் செய்துவிட்டேன்; இவ்வூருக்கு வந்த பிறகும் ஓர் சிறு பெண்ணைக் கலியாணம்செய்துவிட்டேன்; தாங்கள் தான் காப்பாற்றவேண்டும்.

வல்லபன்:—அதனால் ஒரு குறையுமில்லை. பகவானே எத்தனையோ களத்திரங்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறார். நீ மூன்று மனைவிகள் விவாகம் செய்ததில் தவறென்ன. அது பகவத் கிருபையே. நீ செய்தவை சாஸ்திர

சம்மதமானதன்றோ. இதில் பாபமொன்றுமில்லையே. நீ என்ன பாவம் செய்திருந்தாலும் அவைகளெல்லாம் குரு கடாக்ஷத்தால் இன்றே நிவர்த்தியாய்விட்டது. நீ ஒன்றுக்கும் பயப்படாதே.

காவலாளன்.—அதைப்பற்றி அல்ல ஸ்வாமி, நான் ஒரு சிறு பெண்ணை இப்போது கல்யாணம்செய்து விட்டேன்.

வல்லபன்:— இதென்ன! பால்யப் பெண்களை விவாகம் செய்யாமல் விர்த்தாப்பிய ஸ்திரீகளையோ விவாகம் செய்வார்கள்? இது சகஜமன்றோ.

காவலாளன்:—இல்லை ஸ்வாமி! போங்கள். நான் சொல்லுவது உங்களுக்குத் தெரியவில்லை. எனக்கோ வயதாயிற்று; என்னை மறுபடியும் பால்யனாகும்படி செய்யவேண்டும்; நான் தங்களை எப்பொழுதும் மறக்கமாட்டேன்.

வல்லபன்:—அடடா, சற்று முன்பு கேட்டிருக்கக்கூடாதா? இதற்கு மருந்து குருஸ்வாமி வசமே இருக்கிறது. அந்த மருந்தில் ஒரு அரிசி எடை சாப்பிட்டுவிட்டால் அது என்ன வேலை செய்யும்! நரை, திரை, மூப்பு இவை சமஸ்தமும் உன்னைவிட்டோடும். பிறகு உன்னை இவை அணுகவே அணுகா. உன்போல் அத்யாவசிய முள்ள கிரஹஸ்தாஸ்ரமிகளுக்கு மாத்திரம் தான் கொடுக்கவேண்டுமென்றும், இவன் பால்ய சேஷ்டை யுள்ள காமவிகாரிகளுக்குக்கொடுத்து விடுவானென்றும் குருஸ்வாமி கையிலே அது இருக்கிறது. குருதேவரை இதோகூப்பிடுகிறேன். [கூப்பிடுகிறான்] குருமகாராஜ்!

ஜே சீதாராம்! [குருதேவர் நடுப்பாலத்தில் நிற்கிறார்.] இதோ இவன் போய் வாங்கி வருவான்; நீ வந்தால் கொடுக்கமாட்டார்.

காவலாளன்:—திரும்பி வந்துவிடு ஸ்வாமி.

வல்லபன்:— அடே! இன்னும் சந்தேகமா; கிருஷ்ணா! கிருஷ்ணா!! ராம், ராம், இவனைச் சந்தேகிக்கலாமோ?

[பாலத்தில் ஓடுகிறான். துறவிவேடபங்கயச்செல்வியை அணுகி அப்பால் விரைந்து போகச் சொல்லிய பின்பு நடுப்பாலத்திலும் அதை அடுத்துச் சிலவிடங்களிலும், பாலத்தின் குறுக்கே குச்சிகள், தர்ப்பைகள், கந்தைகள் இவைகளைப் பரப்பி தீயைக்கொளுத்திவிட்டுத் திரும்பி விரைந்து அப்பாலத்திற்கு வருகிறான்.]

காவலாளன்:—எங்கே ஸ்வாமி மருந்து? அது என்ன புகையும் வெளிச்சமும் தெரிகிறது?

வல்லபன்:—இவன் சொன்னபடி முப்பு வைக்க வேண்டிய தற்குரிய நேரம் வந்துவிட்டது. கையிலிருந்ததைக் கொண்டு குரு மஹாராஜ், முப்பு வைத்துவிட்டார். முப்பு நன்றாக முடிய நிஷ்டையிலிருக்கிறார். முப்பு முடிந்தவுடன் குருதேவரே இவ்விடம் உனக்கு மருந்து கொண்டு வருவார். நீ பயப்படாதே.

காவலாளன்:—என்ன ஸ்வாமி பாலம் எரிந்து விடுமோ?

வல்லபன்:—இல்லை; ஒரு நாளும் வேகாது. இவனை நிச்சயமாக நம்பு. முப்பு வைத்த இடம் சொர்ணமாக வன்றோ யிருக்கும். நீ நேரே பார்க்கலாம். இந்த

உத்யோகம் உனக்கு எதற்கு? வேண்டிய சொர்ணம் அதி சுலபமாகக் கிடைக்குமன்றோ.

[பாலம் எரிகிறது. மூங்கில் வெடிக்கிறது. மற்றோர் காவலாளன் ஓடிவருகிறான்.]

காவலாளன்—யார் பாலத்தைக் கொளுத்தியது?

[படையாளர் வருகிற சத்தம் கேட்கிறது.

வல்லபன், பாலத்தில் கொஞ்சதூரம் சென்று நின்று கொள்கிறான்.]

காவலாளன்:—ஏமாற்றி விட்டான். மோசம் போனோமே! நம்முடைய வேலையும் போய்விடுமே. [தேடி வந்த நாகனுரின் படையாட்கள் ஓடிவருகிறார்கள். பாலம் எரிவதைப் பார்த்துத் திகைத்து நிற்கிறார்கள். காவலாளர்களை நோக்கி]

படைஞரில் ஒருவன்:—இப்பாலத்தை யார் கொளுத்தியது? துறவிகள் வேஷத்துடன் இங்கு இரண்டு பேர்வழி வந்தார்களா?

காவலாளனொருவன்:—வந்தார்கள். அதிலொருவன் ஏமாற்றி விட்டுப் போய்விட்டான்; [இன்னொருவன்] இதோ நிற்கிறவன், பாலத்தைக்கொளுத்திவிட்டான்; இவனைப் பிடியுங்கள்.

வல்லபன்:—[இடுப்பில் செருகியிருந்த வாளை யுருவிக் கொண்டு] நீங்கள் ஆயிரம்பேரானாலும் வரலாம்; நீங்கள் ஒவ்வொருவராகத் தான் என்முன்பு வர முடியும். முடியுமானால் என்னைக் கொன்று விட்டு இப் பாலத்தின் வழியே போகலாம். உயிரை இழக்கத் துணிந்தவர்கள் வாருங்கள்.

[பாலத்தின் நடுப்பாகம் எரிந்து கீழே விழுகிறது வல்லபன் வெள்ளத்தில் குதித்துவிடுகிறான்]

# பாண்டிமாதேவி பதைத்துயிர்விடுதல்

## XI

[பாண்டியன் அரண்மனை; இரவு; பாண்டிமாதேவியும் (கண்ணன்மாறனார் மனைவி) அங்கயற்கண்ணியும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.]

பாண்டிமாதேவி:—*அம்மா! அங்கயற்கண்ணி! நான் இத்துன்பங்களை எல்லாம் எவ்வாறு பொறுப்பேன் ... அம்மா! எவ்வாறு பொறுப்பேன்! கடவுள் எம்மை மிகவும் சோதிக்கிறார் ... நாங்கள் யாருக்கு யாது துன்பம் செய்தோம்? கடவுள் எங்களை ஏனோ இவ்விடும்பைக்கு ஆளாக்கினர்?*

அங்கயற்கண்ணி:—*அம்மா! அழாதீர்கள் [அழுகுரலோடு] தாங்கள் எவருக்கும் இம்மையில் நன்மையன்றி எத்தீமையும் செய்ததில்லை. இவை எல்லாம் முற்பிறப்பிற் செய்தவினையின் பயனாக வேண்டும்; அழவேண்டாம். [பாண்டிமா தேவியின் கண்களைத் துடைக்கிறாள்.]*

பாண்டிமாதேவி:—*[அழுகுரலுடன்] அம்மா! நீயாவது என்னருகிருந்து எனக்காறுதல் கூறுகின்றனையே. நீ இல்லையேல், நான் என் செய்வேன்; கடவுள் எம்மை இப்படிச் சோதித்தல் தகுமோ? நாங்கள் என்ன தவறிழைத்தோம்.*

அங்கயற்கண்ணி:— *அம்மணி! தாங்கள் குறை ஒன்றும் செய்ததில்லை. நாம் எதிர் பாராது நமக்குறும் இவை யாவும், நம் நன்மையின் பொருட்டேயென்று கருது*

கின்றேன். "நன்றாங்கால் நல்லவாக் காண்பர் அன்றாங்கால், அல்லற் படுவ தெவன்" துக்கமே நம்மைத் தூயவராக்கிடும்; "துன்புள தெனினன்றோ சுகமுளது"; நல்லார் அனைவரும் அல்லல் உறுவதும், அல்லார் அனைவரும் நன்மை பெறுவதும், பொல்லா உலகிற் பொருந்தின வாகும். அம்மா! "நன்றே செய்வாய் தீதேசெய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்றே கருதி அமைதியுற வேண்டுகிறேன்.

பாண்டிமாதேவி:—ஆம். இல்லாவிடில் நாம் செய்வது யாதுளது? ஆ! ... என் மகள் களைப்புற்றனளோ? ... வழி நடந்தறியாள் ... ... அவளுக்கும் இவ்வளவு துன்பமோ?

[அழுகிறாள்]

அங்கயற்கண்ணி:—அம்மணி! துன்பமற்றிருந்தார் இவ்வுலகில் யாருளர்? அரசராயிருக்க யாருமே விரும்புவது இயல்பு; அரசரின் கவலையும் அவர் பெறு துன்பமும் யார் தான் அறிவார்? "மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல், துன்ப மல்லது தொழுதகவில்லை" என்றார் ஆன்றோரும்.

[ஓர் பணிப்பெண் வருகிறாள்]

பணிப்பெண்—அம்மணி! சில படையாட்கள் கதவைத்திறக்கும்படி கதவை இடிக்கின்றனர்.

அங்கயற்கண்ணி:—[பாண்டிமாதேவியை நோக்கி] தாங்கள் உள்ளே சென்றிருங்கள். நான் அவர்களுக்குப் பதில் கூறி அனுப்புகிறேன்.

பாண்டிமாதேவி:—வேண்டாம்; எனக்கினி அவர்கள்செய்வது யாதுளது; என் கணவனைக் கொன்றனர்; என் மகளைத் துரத்தினர். என்னையும் கொன்றாரெனில் அதுவும் நன்றே; அம்மா! அவர்களை உள்ளே விடு; என்னைக் கொல்லுமாறு நானே அவர்களை வேண்டுவேன்; நான் எதற்கு உயிர் வாழவேண்டும்; என்னைக் கொன்றோர், என் துயர்ப்பிணி போக்கும் தூயவராவர்; அவர் கெட்டவராகார்.

அங்கயற்கண்ணி:—[அழுகையோடு] அம்மா தங்களழுகையைக் காண என் மனம் கரைகிறது. தாங்கள் இறப்பதானால் நாங்கள் ஏன் இப்பாடு படுகிறோம். உங்களைக் கொல்லு முன் முதலில் என்னையே கொல்லுமாறு செய்வேன். தங்கள் பிடிவாதம் செய்யாதீர்கள். சற்றே உள்ளே போவீர்களாக; உங்களைக் கொல்லும்படி நீங்கள் அவர்களை வேண்டினும் அவர்கள் கொல்லார் என்பது திண்ணம். தங்களைக் கொல்வதால் அவர்களுக்காவதென்ன? துன்பம் செய்வதே அவர்கள் கருத்து. மானக்கேடா யின யாதும் செய்யின் யாம் என் செய்வோம். மானம் கெடவரின், பின்பு அதை அகற்றுதல் இயன்றதோ? [அழுகையோடு] அம்மா! என் பொருட்டாயினும், சற்று உள்ளே செல்லுங்கள் [மண்டியிட்டு இறைஞ்சுகிறாள்.]

[பாண்டிமாதேவி அழுகையோடு ஒன்றும் கூறாது நிற்க, அங்கயற்கண்ணி அவரை உள்ளே அழைத்துச் சென்று தாழிட்டு வருகிறாள்] [பணிப்பெண்ணை

நோக்கி] கதவைத் திறந்து அவர்களை வரச்சொல்.

[படைஞர்கள் உள்ளே வருகிறார்கள்.]

ஓர் படைஞன்:—நீ யார் பொம்பிளை? ஏன் இத்தினி நாழி? கதவைத் தொற, இன்னம் உங்களுக்கு அதிகாரமோ? ஏன் பொம்பிளை பேசாமலிருக்கே.

அங்கயற்கண்ணி:—மூடர்களே! ஒழுங்காய் பேசுங்கள். என்ன கொடுமை செய்ய இங்கு வந்தீர்கள்? போவீர் அப்பால்; தகாதன செய்வீர்களாகில் உங்களை வெட்டிவிடச்செய்வேன்.

படைஞர்களிலொருவன்:—வெட்டுகிறவர்களைப் பாருடா; [எல்லோரும் நகைக்கிறார்கள்.] ஏ இங்கிட்டு வா ... வா வெளியே ... மூடனும் கீடனும், இதெல்லாம் பேசாதே. தெரியுமா? மூடத்தைக் கண்டியோ? ரொம்ப கெட்டிக்காரி. என்ன தெயிரியத்தைப் பாரு.

மற்றோர் படைஞன்:—அம்மா இங்கிட்டு ஆம்பிள்ளைங்கயாருமிருக்காக?

அங்கயற்கண்ணி:—இங்கு ஆண்பிள்ளைகள் ஒருவருமில்லை.

ஓர் படைஞன்:—ஆம் பிள்ளைங்கயெல்லாம் பெண்பிள்ளைங்களா போய்விட்டாங்களா? காலங் கலிகாலம்; அப்பிடித்தான் போவாங்க, உள்ளதைச் சொல்லுங்க.

அங்கயற்கண்ணி:—மூடர்களே! யான் தானைத் தலைவர் மனைவியென்பது உங்களுக்குத் தெரியாதோ? உங்களைச் சரியானபடி தண்டிக்கச் செய்வேன். உங்களுக்குத் தலைவரில்லையா? நீங்கள் ஏன் இப்படித் தலைக்குத்தலை பேசுகிறீர்கள்?

சிறுபடைத் தலைவன்:—அடே! நில்லுங்கள். அம்மா இவர்க ளறிவில்லாதவர்கள்; தங்களை இன்னாரென்று தெரி யாமல் பேசிவிட்டார்கள். தங்கள் நாயகர் இங்கு வந்த வரெங்கே?

அங்கயற்கண்ணி:—ஐயா! நீர்தான் தலைவரோ?

[அழுகையுடன்] உம் முன்னிலையில் இவ்வற்பர்கள் இப்படிப் பேசுவதா? இது தான் உம் தலைமையின் திறமோ? விரைவில் உம் நடத்தையை என் கணவருக்கு அறிவிப்பேன்.

தலைவன்:—அது தானே வேண்டும்; அவர் எங்கே சொல் லுங்கள், சீக்கிரம் சொல்லுங்கள்.

அங்கயற்கண்ணி:—அவர் வந்தவுடன் இதைப்பற்றித் தெரி விப்பதாக அல்லவோ யான் கூறியது.

தலைவன்:—இதெல்லாம் ஏனம்மா வீண் பேச்சு; உங்கள் புருஷனுக்குப் படைத்தலைமையில்லை; அரசர், நாகனா ரைப் படைத்தலைவராக்கினார்; நாகனார் உங்கள் கண வரைக் கூப்பிடுகிறார். அவர் சீக்கிரம் வரவேண்டும்.

அங்கயற்கண்ணி:—என் கணவருக்குத் தலைமையில்லையா! அவர் அப்படிச் சொல்லவில்லையே?

ஓர் படைஞன்:—வந்துட்டது உள்ளது வெளியே; பொய் சொன்னா பொருந்தச் சொல்லவேணும்; இதெல்லாம் பொம்பிள்ளைங்களுக்கு வருமோ? பொம்பிள்ளைங்கள் படிச்சு, படிச்சு பாக்குறாங்கோ, என்ன படிச்சாலும் இதெல்லாம் வருமோ? இதுக்குப் புறந்தவங்க ஆம்

பிள்ளைங்க நாங்கள், தெரியுமா? போம்மா புத்தி கெட்ட பொம்பிள்ளை.

மற்ருேர் படைஞன்:—இவருதான் தலைவரு பொஞ்சாதியாம்; ஒரு பொய் செரியா சொல்லத் தெரியலே. எங்களுக் கெல்லாம் வேலை கொடுத்திருந்தா நாங்கள் இப்படிப் பேசமாட்டமல்ல, ஒங்க ஆளுக்கா கொடுத்திங்கல்ல இப்பப் படுங்க; இப்ப படுங்க.

தலைவன்:—அடே சும்மாயிரு; அம்மா! இதைப்பற்றிச் சொல்லவில்லை யென்ருல் உங்கள் புருஷன் வேறு என்ன சொன்ருர்.

அங்கயற்கண்ணி:—ஐயா மன்னிப்பீர்; நான் தவறிச் சொல்லி விட்டேன்.

படைஞர்களில் ஒருவன்:—இவர் எப்பவும்விளக்கெண்ணெய்; கொடுத்தா ஒரு ஒதை, எல்லாம் வெளியே வருது.

மற்ருேர் படைஞன்:—போடா ஒரு பூசை; எல்லாந் தன்னாலே வெளியே வருது; மயிலே மயிலே இறகு போடு இன்ன அது போடுமா? குடு ஒரு பூசை. [ஒருவன் ஓடிப்போய் அடிக்கிருன். அங்கயற்கண்ணி அலறிக்கொண்டு கீழே விழுகிருள். பாண்டிமாதேவி படைஞர்களைத் தள்ளிக்கொண்டு வேறு வழியாக ஓடி வருகிருர்.]

படைஞரில் ஒருவன்:—அடே! ராசா பெண்சாதியிடா; தொடாதே; தலைபோயிடும்.

மற்ருேர் படைஞன்:—கதவெல்லாம் தொறங்கடா; உள்ளே போங்கடா; மூலை முடுக்குகளெல்லாம் தேடுங்கடா.

[கதவுகளைத்திறந்துகொண்டு தேடுவதற்கு எல்லோரும் உள்ளே போகிறார்கள். அங்கயற்கண்ணியைப் பாண்டிமாதேவி அலறிக்கொண்டு தூக்குகிறாள்; முகத்தைத் துடைக்கிறாள்; தன்மேல் சாத்திக்கொண்டு அழுகிறாள்.]

அங்கயற்கண்ணி:—(முழு நினைப்பின்றி) அடே! பாண்டிமா தேவியைத் தொடாதீர்கள். அவருக்குப் பதில் நான் வருகிறேன். என்னைக்கொண்டு போங்கள். [வலி பொறுக்காது புரளுகிறாள்; மூர்ச்சித்து விழுகிறாள்.]

பாண்டிமாதேவி:—ஐயோ! ஐயோ! [அழுகிறாள்] என்னால் நீயும் இறந்தாயா? நினைப்பிலாத்தன்மையிலும் என் நினைப்போ; ஐயோ பாவியான்; ஏ பாவிகளா! என்னைக் கொன்றிருக்கக்கூடாதா? [அழுகிறாள்; அங்கயற் கண்ணியின் முகத்தைத் துடைக்கிறாள்.] ஐயோ! இறந்துவிடுவாளோ? அம்மா அங்கயற்கண்ணி சற்று பேசு. இப்பாவிக்காகவா நீ உயிர்விடத் துணிந்தாய். ஐயோ பேசவில்லையே. ஆ! இந்தக் கொடுமையை யான் கண்ணால் பார்க்கவோ இருந்தேன். [அழுகிறாள்] ஐயோ! தண்ணீர் கொஞ்சம் கொண்டுவருவதற்கு ஒருவருமில்லையா? [தானே சற்று உள்ளே சென்று தண்ணீர் கொண்டுவந்து முகத்தைத் துடைத்து அங்கயற்கண்ணியைத் தன் மேல் சாத்திக் கொள்ளுகிறாள்.]

பாண்டிமாதேவி:—[அழுகையோடு] அம்மா சற்று வாயைத் திற. தண்ணீர் கொஞ்சம் சாப்பிடு. [தண்ணீர்

கொஞ்சம் கொடுக்கிறாள், அங்கயற்கண்ணி கொஞ்சம் அருந்துகிறாள்.]

பாண்டிமாதேவி:—அம்மா ஒரு வார்த்தை சொல். அம்மா எனக்காக நீயும் இறப்பதோ?

அங்கயற்கண்ணி:—ஆ! வல்லபா! என் கண்ணே! என் மகனே!... இங்கே வா...உனக்கு ஒரு குறைவுமில்லை... பங்கயச்செல்வியைப் பாதுகாப்பாய் ... உனக்கு ஒரு குறைவுமில்லை, எந்நாதா, என்னை மன்னிப்பீர்; என்னு லானவரைத் தேவியைக் காத்தேன். தங்கள் சொற் படி நடந்தேன் ... பாண்டிமாதேவியைப் பார்த்துக் கொள்ளுங்கள், கும்பிடுகிறாள் ... பார்த்துக்கொள் ளுங்கள். [உயிர் போய்விடுகிறது.]

பாண்டிமாதேவி:—[அழுகிறாள்] ஆ! ஐயோ; உயிர் போகும் தருணத்திலும் எங்கள் நினைப்பா! ஐயோ! இப்பாவி யின் பொருட்டா இத் துயரமெல்லாம்! ஆ! இக் கொடுங்கொலை காணவோ நான் இருந்தேன்! இவர்கள் அன்பிற்கு அளவேயில்லை...இவர்கள் இறக்க நான்வாழ வேண்டுமோ? ... இத்துயரமெல்லாம் எங்ஙனம் பொறுப்பேன்! எங்ஙனம் பொறுப்பேன்! [புலம்பு கிறாள்] மாறனார் வந்து என் மனைவி எங்கே என்றால் நான் என்ன சொல்வேன் ... என்ன சொல்வேன்,

என்னாலல்லவோ நீ இறந்தாய்! ... நீ இறந்தாய்! ஐயோ! என் பாவத்தை எங்கு தொலைப்பேன். (தலையில் மோதிக்கொள்ளுகிறாள்.) ஐயோ! நான் பாவி; நான் ஏனிருக்கிறேன். நான் தொலையவில்லையே. [கீழே விழுகிறாள், அழுகிறாள், எழுகிறாள், பிதற்றுகிறாள்] ஏ சிறுபடைத்தலைவா!...பெரும்படைத்தலைவா! இங்கு வாடா; என் தலையிற்போடு ... போடு ... போடு ஏண்டா ... தடை ... போடு ... போடு .... என்னைத் தொலைத்துவிடு, [ஒரு தூணில் முட்டிக்கொள்கிறாள்; மூர்ச்சித்துக் கீழே விழுகிறாள் [இறந்துவிடுகிறாள்.]

# குன்றத் தமைதியும் குறமகள் துணையும்

## XII

[சிறுமலை ...... ஓர் சிறுகுடில் முன்றில் ....... நடு இரவு]

[பங்கயச் செல்வி துவராடையுடன் நின்றுகொண்டு]

ஆ! ஆ!

எல்லாம் ஓய்ந்தன; ஓய்ந்தன எல்லாம்
நில்லா உலகில், எல்லாம் ஓய்ந்தன

[சற்று நின்று அங்குமிங்கும் நோக்குகிறாள்]

ஆ! ஆ! என்னே அசைவற்ற நிலை; ஆ! ஆ! என்னே அமைதி!......

அமைதியின் அழகு அழகு பெற் றதுவே
தனிமையும் அமைதியும் தழுவிக்கொண்டனவோ

[சற்றுப் பேசாமல் நிற்கிறாள்]

எல்லாம் ஓய்ந்தன எல்லாம் ஓய்ந்தன
ஓசையும் இல்லை ஓடலும் இல்லை
பூசலும் இல்லை வீசலும் இல்லை
மனதற்ற நிலையும் மானுமோ இதனை
ஓய்வின் தூய்மை ஒளிருகின் றதுவே
எல்லாம் தாண்டி இறையோ டொன்றும்
சொல்லாச் 'சமாதியைச் சொல்லா துணர்த்
துமோ?

[சற்று, பக்கங்களில் பார்த்து அசைவற்று நிற்கிறாள்]

எல்லாம் தூங்கின எல்லாம் தூங்கின
ஆ! ஆ!! இந் நிலவும் ஆழ்ந்தது துயிலில்
ஓயா அருவியும் உறக்கமுற் றதுவோ?

[சற்றுப் பேசாதிருக்கிறாள்]

தூங்குக மரமே! தூங்குக நிலமே!
தூங்குக வானே! தூங்குக நிலவே!
மக்கள் பிறப்பினும் மக்கள் இறப்பினும்
இன்புற் றேகினும் துன்புற் றழுங்கினும்
உங்களுக் கிவையெலாம் ஒருபொருட் டாகுமோ?

[சற்று அசையாமல் நிற்கிறாள்]

ஆ! நான் எங்கிருக்கின்றேன்? [கண்களைத் துடைத்துக் கொள்கிறாள்]. ஆ! நான் எங்கே! என் துன்பெலாம் எங்கே! ...... நான் எனும் நினைப்பும் எனக்கெனும் எண்ணமும் எங்கே போயின? ...... எங்கே போயின? ...... அரைக்கணமாயினும் எனை மறந்திருந்தேன் ...... யான் எனதென்னும் செருக்கறு பட்டதோ? ...... என்னை மாற்றியது இவ்விடத்தின் தன்மையோ?

இன்றிரவெல்லாம் சற்றும் உறக்கமே கொண்டிலேன். எல்லாப் பொருள்களும் உறக்கம் கொண்டன. கண்களென் துயில்கொண்டில!......பாவி எனத் துயில் பறந்து போயதுவோ?......ஆ! துக்கம் கொண்டோர்க்கு......தூக்கமும் எய்துமோ?......ஆ! இவ் வமைதியின் அழகு என்மனதை விட்டகன்றிலது......

வையகக் கப்பால் வழக்கும் துன்பமும்
வையகக் கிப்பால் வழிந்திடும் அமைதி.

[சற்றுப் பேசாது நிற்கிருள்]

ஆ! என் அன்ஞய்! என்பிரிவை எவ்வாறு நீ பொறுக்கின்றனையோ? (அழுகுரலோடு) சிறு வயதிலிருந்து உன்னை நான் ஒருநாளும் பிரிந்தறியேன்...[அழுகிருள்] என் அன்னையை என்று காண்பேன்? அன்ஞய்! உன்னை மீண்டும் காண்பேனே?

[சற்றுப் பேசாதிருக்கிருள்]

என் அண்ணு! நீ உயிர் பிழைத்தனையோ?...வேக வதியாம் வையைவாய்ப்பட்டார் வாழ்வதுமுண்டோ?... [அழுகுரலுடன்] என் பொருட்டு நீ உன் உயிரைக் கொடுத்தாய்!... ஆ! என்னுல் யார் யாருக்குத் துன்பம்; என்னுல் என் தந்தையும் நொந்தார்; என் தாயும் நொந்தனர் ... நீயுமிறந்தாய் ... என்னுல் யார் யார் இன்னும் துன்புறுவார்களோ? ஆ! ... பிறரைத் துன்புறுத்தற்கென்றே யான் பாவி பிறந்தேனே! பாவி ....

[அழுகிருள்]

[சற்று அசைவற்று நிற்கிருள்] நான் காட்டையும் மலையையும் கடந்து எவ்விதம் செல்வேன்; இதற்கு என் உடல் வலி பெற்றிலதே. [அழுகிருள்] என்னை இவ்விடத்திற்கு அழைத்துவந்த குறமாது நிலைத்த அறிவுள்ளவளாய்த் தோன்றவில்லை. எனக் குற்றவைகளெல்லாம் யான் அவளிடம் கூறிவிட்டேன். அவள் முருகன் படை வீடுகள்தோறும் சென்று வருவதாய்க்

கூறினள். அவள் அறியாது யாரிடமாவது யான் கூறியவற்றைக் கூறின், யான் என் செய்வேன் ... அவள் என்னை இவ்விடமிருத்தி இக்குன்றக்குறவ ரெடுத்த வெறியாட்டினில் சேர்ந்துகொண்டனள். அவள் மீண்டும் எனக்கு வழித்துணை யாவளோ? அவள் துணையின்றி யான் எங்ஙனம் வழிதெரிந் தேகுவேன்? வெறியாட்டயர்தல் முன்பே ஓய்ந்தது. அவள் இன்னும் வரக் காண்கிலேன். என் நினைப்பு அவளுக்கிருக்குமோ? அவள் மெய்மறந்து வெறி யாட்டில் கலந்துகொண்டனள்; யாவரும் மெய்மறந்தே ஆடினர்.

ஆ! என்னே! இக்கல்லா மாந்தரின் தெய்வவழிபாடு! ...... வெறியாட்டெல்லாம் வெறும் ஆட்டமென்றிருந் தேன். இதனைப் பார்த்திருந்த யானும், எனை அறியாது அடி எடுத்தாட நயந்தேன்! இவர்களின்,

பலநயம் புகுத்தாப் பாட்டின் ஓசையும்
துயரக் குரலும் தூங்க லோசையும்
திரியும் மனதைத் திரியா திழுத்துத்
தெய்வ நினைப்பிற் சேர்த்துப் பிணிக்கக்
குழலும் கோடும் குமுறும் துடியும்
வெறிபெறச் செய்து அருள்பெறச் செய்வன

ஆ! என்னே இவர்கள் எளிதில் அருள் பெறும் முறை! ஆ! என்னே இவர்களின் வெள்ளை உள்ளமும் கள்ளமில் நினைப்பும்! ...... ஆ! ஆ!

கல்லா மாந்தரே நல்லோர் நல்லோர்
*நெய்யும் திரியும் நீக்கிய விளக்கும்
நாத சுரமும் நாட்டியப் பெண்களும்
†பொருட்சுவைதருவன அருட்சுவை தருபவோ?
இவை—இறைவன் நினைப்பை எழுகடற்கப்பால்
வெருட்டி ஓட்டுவ வீண்நினைப் புய்ப்பன
ஆ! கல்வி என்னும் தொல்கடல் பிழைத்திலேன்!

இவர்கள் போன்று இறைவனைப் பணிதல் எனக்கும் பொருந்துமோ?

[சற்று அசைவற்று நிற்கிறாள்,]
[ஓர் அழுகுரல் கேட்கிறது.]

பங்கயச்செல்வி:—ஆ! இதென்ன அழுகுரல்? அமர்ந்த நீரிடை எறிந்த கல்லென, என் அமைதியைத் தொலைத்தது. இந்நேரத்தில் யார் இங்கு வருகிறது? யார் அழுகிறது? என் போல் காதலால் நொந்த கன்னிகளுளரோ?

[ "உட்கோட்டைக்குள்ளிருந்தார் ஒக்க மடிந்தார்கள்" இந்த அழுகுரல் கேட்கிறது]

பங்கயச்செல்வி:—ஆ! யாரைக் குறித் தழுகிறார்கள்? ... இங்கு கோட்டையுமில்லை. கொத்தளமுமில்லை ...... யார் மடிந்தது?... ...

[ஒரு குழுமாது பித்துக்கொண்டதனை யுணர்த்தும் உடையுடனும், நடையுடனும் வருகிறாள்.]

---

மின்சார விளக்கு (Electric Light)

உலகப்பொருட்சுவை (Taste of material objects)

பங்கயச்செல்வி:—அம்மே! உன்னைத் தானே எதிர்பார்த்திருந்தேன்; என்னை நீ மறந்தனையோ என்று நான் தயங்கியிருந்தேன்; நீ ஏன் அழுகிறாய்?

குறமாது:—அம்மே! என் புருசன் நினைப்பு வந்திருச்சு; நான் அழுகிறேன்; உனக்கென்ன?

பங்கயச்செல்வி:—உன் புருஷன் யார்?

குறமாது:— [கையைக் கொட்டியாடி]

குறவர் குடிசை நுழைந்தாண்டி, அவன்
கோமாட்டி எச்சிலை விழைந்தாண்டி.

பங்கயச்செல்வி:—[அவள் பாடிக்கொண்டு ஆடுகிறதைப் பார்த்து] போதும் உன் ஆட்டத்தை நிறுத்து; (கையைப்பிடித்திழுத்து நிறுத்துகிறாள். குறத்தி அழுகிறாள்.)

"காதல் தணியேனோ, கண்டுமகிழேனோ
சாதல் தவிரேனோ, சங்கடந்தான் தீரேனோ"

பங்கயச்செல்வி:—[தனக்குள்ளே] இவள் ஞானப் பித்துக் கொண்டவள் போலும், இப்பித்துக் கொண்டவளுடன் யான் இடையூறின்றிப் போய்ச் சேர முடியுமோ? யார் கையிலும் அகப்பட நேருமோ?

[குறத்தியைப் பார்த்து]

அம்மே! அழாதே; எனக்கும் அழுகை வருகிறது; நாம் போகவேண்டிய தூரம் எவ்வளவு இருக்கிறது?

குறமாது:—[அழுகிறாள்]

கேடுவரு மென்றறியேன்
கெடுமதிகண் டோற்றமல்
பாடுவரு மென்றறியேன்
பதியாண் டிருந்தேண்டி,"
ஒக்க மடிந்தாலடி
ஊடுருவப் பாயுமடி,
கற்கோட்டை யெல்லாம்
கரிக்கோட்டை யாகுமடி.

பங்கயச்செல்வி:—அம்மே! அம்மே!! என்னைக் குறித்தோ அழுகிறீர்? ... நீர் சொன்னவைகள் எனக்குப் பொருத்தமானவை போலத் தோற்றுகின்றனவே.

குறத்தி:—இல்லே அம்மே! இல்லே; நான் பித்துக்கொளி; உளறுகிறேன்; நீ போர ஊர் இதோ இருக்கு; நான் போகணுமே ஏரகம், அது கிட்டவாயிருக்கு? நான் தட்டித்தடவிப்போய்ச் சேருகிறேன். உன்னூருக்குக் குறுக்குப்பாதை இருக்கு; குறுக்குப் பாதையே வந்துட்டே; ஒருவர் கண்ணிலும் படாமே நீ போய்ச் சேரலாம். பயப்படாதே வா.

* இக் குறத்தி பாடலில் பங்கயச்செல்வியின் செய்திகள் குறிப்பாக அமைந்திருத்தல் காண்க.

# நாகனார்வஞ்ச நயம்பெறுகூற்று

## XIII

[மதுரை; நாகனார் இருக்கை; சிறுபடைத் தலைவர்களும் சில சிற்றரசர்களும் கூடியிருக்கின்றனர்.]

நாகனார்:—*அரசர்களே! தலைவர்களே! நான் சொல்லப் போவதைக் கவனித்துக் கேளுங்கள். அரசர்களே! கண்ணன்மாறனார் அல்லாமல், வேறொருவரும் கொலை செய்திருக்க மாட்டார்களென்று நீங்களே முன்பே தீர்மானித்தீர்கள்; அதனை மறுபடியும் மற்றோருக்கும் தெரியும்படி சொல்லுகிறேன். இரத்தம் தோய்ந்த உடையுடனும், இரத்தம் படிந்த வாளுடனும் காவற் காரனை நான் பிடித்தேன். கண்ணன்மாறனாரே, காவற்காரனை உள்ளே போகச்சொன்னதாக ஒப்புக் கொண்டார். காவற்காரனும் இதை ஒப்புக்கொண் டான். இவர்கள், தாங்களே கொலை செய்தார்களென்று ஒப்புக்கொள்ள எதிர்பார்க்க முடியுமோ? இவர்கள் இவ்வளவு தூரம் ஒப்புக்கொண்டதே சுலபமானதல்ல; அரசர் மீண்டும் படைத்தலைமை அளிப்பதாகக் கண்ணன்மாறனாருக்கு உறுதி கூறினாரல்லவா? அப்படி உறுதி கூறியிருக்கும் பொழுது, படைத்தலைமை சில காலம் இழந்ததற்காக ஒருவர் கொலை செய்யத் துணிவாரோ என்று யாரும் சந்தேகிக்கக் கூடியது. கண்ணன்மாறனாரின் நடத்தையைக் கவனியுங்கள்; கொலை செய்யாதவராயிருந்தால் ஏன் அன்றிரவே*

ஓடிவிடவேண்டும்? அன்றிரவே சிற்றரசர்கள் முன்னிலையில் இன்னவர் கொலைசெய்தவரென்று அவர் ரூபித்திருக்கவேண்டுமல்லவா? கொலை செய்தவர் தனக்குத் தெரியாவிட்டாலும் தானும் மற்றவர்களைப் போல அங்கு இருந்திருக்கவேண்டியதவசியமல்லவா? குற்றமுள்ள மனம் குறுகுறுக்கும். குற்றமுள்ள மனமுடையவர்கள் அன்றிருந்தால் எப்படியும் அகப்பட்டிருப்பார்கள். அவர்கள் செய்கையால், அவர்களை அப்போதே கண்டுபிடித்திருக்கக்கூடும். பாவம்! இவ் வேழைக் காவற்காரன் தனக்காக இக் கொலை செய்திருப்பானென்று நம்புகிறீர்களா? இக் கொலையால் அவனுக்கு என்ன பலன்? தக்கபடி உதைபட்டதே தவிர, வேறுபலன் அவனுக்கொன்றுமில்லை. கண்ணன் மாறனாரே இக் கொலைசெய்யத் தூண்டியவர். அவரே இக்கொலைக்குக் காரணம். அவர் நம்மோடு அன்றிருந்திருந்தால் தம் மனத்தின் தன்மை தமது செய்கையால் வெளிவந்துவிடுமென்றே அவர் ஓடிவிட்டார் என்று, நான் துணிவுடன் சொல்வேன். அரசர் அயலூரில் இறந்துகிடக்கவும், அவரிடம் படைத்தலைவராகவும், மெய்காவல் தலைவராகவுமிருந்த ஒருவர், அவரை அடக்கம் செய்யாமலே, ஓடிவிடுவாராகில் அவரைவிடப் பாதகனொருவன் இருக்கக்கூடுமோ? அயலானாகிய நானே அரசரைக் காத்து அடக்கம் செய்வது! கண்ணன் மாறனார், பெற்ற பொருள் யாவுமே அரசரால் பெற்றது. அவர் சாப்பிட்டது அரசரின் அன்னம். அவர் உடுத்தியது அரசரின்

உடை, பல வழிகளிலும் தனக்கு உதவிசெய்த ஒருவரைக் கொல்வதைவிட அதிகமான பாவச்செயல்கள் வேறெதவுமுளதோ? அயலூரில் அறுதிப் பிணமாகப் போட்டுவிட்டுச் சென்றது ஒன்று மாத்திரமே, அவர் குற்றத்தை நன்குகக் காண்பிக்கிறதாகிறது. நீங்கள் தேசாபிமானமுள்ளவர்களாஞல், அயல் நாட்டாஞகிலும் சரி, தன்ஞட்டாஞகிலும் சரி, குற்றம் செய்தவனைத் தண்டிக்கவேண்டுமென்பது நீங்கள் கொள்ளவேண்டியதொன்று. நீங்கள் இக்கொள்கையைக் கொள்ளுவீராயின் அவனைத் தண்டிக்கக் கொஞ்சமும் பின்வாங்கமாட்டீர்கள். உங்களுடைய நாட்டின் நலத்தையும், உங்களுக்கு நல்ல பெயர் கிடைக்கவேண்டுமென்பதனையும் அயல் நாட்டாஞகிய நான் அவ்வளவு கவனிக்கவேண்டிய அவசியமில்லை. யார் எக்கேடு கெட்டால் எனக்கென்ன ?

சிறுபடைத்தலைவரில் ஒருவன்:—எழுந்து ஐயா! காவற்காரன் ஒரு பலனையும் கருதி இதனைச் செய்திருக்கமாட்டானென்று சொன்னீர்களே, கண்ணன்மாறனுருக்குத்தான் இதனலென்ன பயன்?

நாகஞர்:—இவ்வூர்ச் சிறுபடைத் தலைவர்களிலொருவராகிய இவரைக் கேட்டால் தெரியும். [ஓர் தலைவரை நோக்கி] சிறுபடைத் தலைவரே! நீர் எழுந்து உமக்குத் தெரிந்தவற்றைச் சொல்லும்.

சிறுபடைத்தலைவன்:—[எழுந்து] கண்ணன்மாறஞர், கொலை நடந்தஇரவே இம் மதுரைவந்திருந்தார்; தன்மகனிடம்

இளவரசியைக் கூட்டிப் போய் விடும்படி ஏற்பாடு செய்துவிட்டுச் சோழனிடம் போய், ஏதோ பொய் கூறி உதவி பெறலாமென்று போயிருக்கிறார்.

நாகனார்:—நீர் முழுதும் கூறவில்லை; இன்னும் தெரிந்தவற்றை ஒளியாது கூறும். கண்ணனார் மகனுடன் யாராவது பெண் துணை சென்றதுண்டா? எல்லோரும் போகிறவழியே சென்றார்களா? எப்படிச் சென்றார்கள்?

தலைவன்:—பெண் துணை ஒன்றுமில்லை; எல்லோரும் செல்கிற வழியில் செல்லவுமில்லை; அவர்கள் மலை காடுகளின் வழியே தனியே செல்வதாகத் தான் தெரிந்தது.

நாகனார்:—இப்பொழுது கண்ணன்மாறனாரின் எண்ணங்கள் உங்களுக்குத் தெரிகின்றனவா? பாண்டியனுக்கு ஆண் பிள்ளை இல்லை; இளவரசியைத் தன் மகனை மணக்கச் செய்து, தன் மகனைப் பாண்டி நாட்டிற்கு அரசனாக்கி விடலாமென்பது அவர் எண்ணம். உங்களில் எத்தனை பேரோ அரசராகத் தக்கவர்களிருக்கிறீர்கள். உங்களையெல்லாம் ஏமாற்றி, அவன் அரசனாகிவிடுவதா? உங்களைச் சக்தியற்றவர்களென்றல்லவோ அவர் நினைத்தார்? நீங்கள் இன்னும் 'வல்லபன், இளவரசியைக் கூட்டிக் கொண்டு சென்றால், அவன் மணம் செய்து கொள்ளத் தான் கூட்டிச் சென்றான் என்று எப்படிச் சொல்வது, இளவரசியின் உறவினர் வீட்டிற்குச் சென்றிருக்கக்கூடாதா' என்று சந்தேகம் உறலாம். அப்படி நல்ல எண்ணத்துடன் சென்றிருந்தால், பெண் துணை ஒன்று கூட்டிச் சென்றிருக்கவேண்டுமல்லவா?

அப்படியிருந்தால், இளவரசியின் தாயாரும் உடன் சென்றிருக்கலாமே? இளவரசியைப்போன்று அவரது தாயாரையும் காப்பாற்றுவதன்றோ முறை? அவர் அவர்களுடன் போகச் சம்மதிக்கவில்லை யென்றாலும், மாறனார் மனைவி அவருடன் சென்றிருக்கவேண்டு மல்லவா? ஓர் பெண்ணும் ஆணும் தனி வழியே சென்றால் அதிலும் மலைகளிலும், காடுகளிலும், தனிமை யான இடங்களில் இருவரும் தங்கியிருந்து சென்றால் நீங்கள் அவர்களுடைய கருத்து என்னவென்று நினைக் கிறீர்கள்? பாண்டிய நாட்டார்கள் எல்லோரும் மாரனை வென்ற வீரர்களோ? என்னவோ நான் ஒன்றுஞ் சொல்லமுடியாது. அவர்கள் 'இப்போது எந்தக் குகையில் புருஷனும் மனைவியுமாக வசிக்கி றார்களோ தெரியாது? அதைத் தெரிந்துவரும்படி நான் அனுப்பிய ஒற்றர்கள் இன்னும் வரவில்லை. இவனுக்குத் துணையாகச் சோழனிடம் உதவிக்குக் கண்ணன்மாறனார் சென்றிருக்கிறார். சோழனும் உதவிபுரிய உடன்பட்டானும். என்மேற் பொய் கூறி உதவிபெறச் சென்றிருக்கிறான். இவர்களுக்கு உதவி புரியும் சோழன் தைரியத்தைப் பாருங்கள். சற்றுமுன் தோல்வியுற்று ஓடியதை அவன் மறந்தான். இப்படியெல்லாம் இவர்கள் செய்வது, நீங்கள் அற்பர்கள், வலிமையற்றவர்கள், ஒற்றுமையில்லா தவர்கள், ரோஷமற்றவர்கள் என்றல்லவா செய்கி றார்கள்; அரசன் தன் படைத்தலைவனும் மெய்காப் பாளர் தலைவனுமாகிய ஒருவனால் மாண்டான்; அவன்

மகனோ அரசன் மகளைக் கொண்டுபோய்விட்டான்; இந்த அவமானத்தைச் சகியாது அரசன் மனைவி இறந்தாள் ; இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு நீங்கள் சும்மாயிருக்கிறீர்கள். இதைவிடக் கேவலம் வேண்டுமா ? அவமானம் வேண்டுமா ? பார்த்தார் சிரிப்பார்கள். இப்படிப்பட்டவைகள் எங்கள் ஊரில் நடந்தால், சிறு பிள்ளைகள் முதல் வாளை எடுத்துக் கொண்டு போருக்குப் புறப்படுவார்கள். எனக்கு இதனால் ஆவது ஒன்றுமில்லை. நானிருந்தும் இப்படி நடந்ததானால், எனக்கும் இதனால் வந்த அவமானத்தில் பங்குண்டு. இதுவரையில் யான் எத்தனையோ ஊர் களுக்குப் படை எடுத்துச் சென்றிருக்கின்றேன்; இப்படி ஓர் ஊரிலும் நடந்ததில்லை. பாண்டிய நாட் டார்கள் இவ்வளவு மோசக்காரர்களென்று எனக்குத் தெரியாமல் போயிற்று; தெரிந்திருந்தால் இவ்வூருக்கு வந்திருக்கவே மாட்டேன். இனியாவது என்பேருக்குக் கெடுதி வராதபடி ஊருக்குப் போய்விடுகிறேன். எனக்குக் கிடைத்த கீர்த்தி போதும் போதும்.

ஒரு சிற்றரசன்:—இப்பொழுதே நாம் படை எடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும். அதற்கு வேண்டிய பொருளுதவியும் நாங்கள் செய்கின்றோம். நாளையே போருக்கெழ வேண்டுகிறேன்.

மற்றோர் சிற்றரசன்:—கண்ணன் மாறனார்குடியைக் கருவறுத்த பின்பன்றோ, தாங்கள் செல்லுதல் தக்கதாகும். எங்க ளிடமுள்ள படைகளையெல்லாம் தங்களுக்குதவியாக அனுப்புவோம்.

மற்ருேர் சிற்றரசன்:—எம்மிடமுள்ள சிறு படைகளை அனுப்புவதோடு நாங்களும் போர்க்கெழுகிருேம். நாங்களை போர்க்கெழாவிடில் எங்களை மற்றநாட்டார்கள் நகைப்பார்கள். எங்கள் வாழ்வு நகைப்புக்கிடமாகும்.

மற்ருேர் சிற்றரசன்:—இவர்கள் தப்பிப்போய் நாலைந்து நாட்களாகின்றன. நாம் விரைவில் போர்க்கெழ வேண்டும். இதில் சற்றும் தாமதம் கூடாது; எல்லோரும் சீக்கிரம் புறப்படுவோம்.

நாகனுர்:—தங்களிஷ்டப்படி நான் போர் நடத்துகிறேன்; போருக்குப் புறப்படுங்காலத்தை விரைவில் தெரிவிக்கிறேன்; நீங்கள் ஒவ்வொருவரும் சென்று போர்க்குரிய ஆயுதங்கள் உடைகள் தயார் செய்யுங்கள்.

[கூட்டம் கலைகிறது]

நாகனுர்:—[தனியே] இதற்கும் தடைகள் ஏற்படுமோ...... இதனை நான் நல்லவேளையில் தொடங்கவில்லையோ? அல்லது நல்ல காலமில்லையோ? ... கண்ணன்மாறனே என்னை ஏமாற்றுபவன்! இவன் குலத்தையும் சோழன் குலத்தையும் நான் கருவறுக்காது விடுவேனே?

## காதலியைப் பெறு காதலன்தன் திறம்

## XIV

[உறந்தை; சோழன் அரண்மனை; சோழன் இளங்கோவும் அமைச்சர்களும் வீற்றிருக்கிறார்கள்.]

வாயில்காப்போன்:—*அரசே! தங்களைக் காண ஓர் துறவி வந்திருக்கின்றார். அவர் பாண்டிய நாட்டிலிருந்து வருவதாகவும், தங்களை விரைவில் காணவேண்டு மென்றும் தெரிவித்தார்.*

இளங்கோ:—*பாண்டியனோ, நமக்குப் பெரும் பகைவன். அப்பகைப் புலத்தார்க்கு நம்மிடம் யாது காரியம்? யாம் அரசியற்பணிகளில் ஆழ்ந்துள்ளோம்; இப்போது எம்மைக் காணச் சமையம் வாய்க்காதெனக் கூறிவிடு.*

அமைச்சரிலொருவன்:—*அரசே! பாண்டியன் பகை கொண்டானெனில் அவர் நாட்டுத் துறவிகள் என் செய்வார்கள்? நாட்டின் பற்றையும் துறந்தவரல்லரோ துறவிகள். துறவி ஒருவர் நம்மை நண்ண, அவரைக் காண நாம் மறுத்தல் முறையன்று. துறவிகளே நல்ல தூதர்களும் ஆவர். நம் பகைமை நீக்கி ஒருமேனை ஒற்றுமை செய்யவே ஈங்கு இவர் எய்தியிருத்தலும் கூடும். ஆதலின் தாங்கள் அவரைக் காணும்படி வேண்டுகிறேன். ஒன்னார்த்தெறலும் உவந்தாரை யாக்கலும் தவத்தோர் செயல் என்பதை யான் கூறவும் வேண்டுமோ?*

இளங்கோ:—ஆம்! உண்மை. [தனக்குள்] நம் காதலியின் செய்தியும் இவரால் தெரியலாமே [வாயிற்காப்போனை நோக்கி] உள்ளே வரச்சொல். [துறவி வேடத்தில் பங்கயச்செல்வி உள்ளே வந்து சற்று தூரத்தில் நிற்கிறாள். இளங்கோ அரியணை மீதே யிருக்கின்றான்.]

பங்கயச்செல்வி:—அரும் பெறலரசே! வாழ்க நும் கொற்றம்; ஈதோ துறவிகளை வரவேற்கு முறை? வளப்ப மிகுதி யால் வழக்கமும் மாறுமோ? ஒழுக்கம் குன்றினீர் என்பதை யான் அறிந்திருப்பின் இங்கு வந்திரேன்.

இளங்கோ:—[தனக்குள்] இக்குரல், யான் முன் கேட்டதாக விருக்கின்றதே!

அமைச்சரிலொருவன்:— [எழுந்து] அரசே! அரியணை மீதிருந்தபடியே, துறவியை வரவேற்பது முறையல்ல.

இளங்கோ:—(அரியணையினின்று எழுந்து) ஐய! ஆசனத் தமரவேண்டுகிறேன். பாண்டிய நாட்டுத் துறவியே போலும்! ஆயினும் அடிகள் உடை, ஐயத்தை உண் டாக்குவதாயிற்று; அடிகள் உண்மைத் துறவிதானோ? பாண்டியனுக்கும் எனக்கும் பகை மூண்டிருப்பதை யறிவீர் போலும்?

துறவி:— [பங்கயச்செல்வி] யான் உண்மைத் துறவியே; ஐயம் வேண்டா; பகை உண்டெனில், பாண்டியன் மகளைக் காதலித்ததெங்ஙனம்? பகைமையால் காதலைத் தவிர்த்ததுண்டோ?

இளங்கோ:—(விரைந்து துறவியினிடத்து வருகிறான், உற்று நோக்குகிறான்) ஆ! பங்கயச்செல்வி! என் ஆருயிர்க்

காதலி! [பங்கயச்செல்வியை முத்தமிட எத்தனிக்கிறான். பங்கயச்செல்வி விருப்பமிலாள்போன்று அவனை அகற்றி விலகி நிற்கின்றாள்.]

பங்கயச்செல்வி:—அரசே! அரசரை அணுகினோர் அடைவது மிதுவோ? கன்னியொருத்தி தங்களைக் கருதியடைந்தால், அவளைப் பலரிடை நாண வைப்பதோ தங்கள் தன்மை? தாங்கள் இவ்வாறு செய்வீர் எனத் தெரிந்திலேன்; தெரிந்தால் இவ்விடம் வந்திரேன்.

இளங்கோ:—பங்கயச்செல்வி! பொறுக்கவேண்டுவேன்; என் ஆர்வமும் ஆவலும் என் கண்களை மறைத்தன; அமைச்சர் இருப்பதை அறவே மறந்தேன்...... ஆயினும், இதில் தவறொன்றுமில்லை; என் காதலை யாவரு மறிவர்; நீயே என் காதலி என்பதை இன்று அறிந்தனர்; என் செய்கை தவறெனக் கொள்ளிற் பொறுக்க வேண்டுகிறேன்.

பங்கயச்செல்வி:—அரசே! யான் ஓர் கன்னியென்பதை உணர்வீர்; என்னை யார்தர நீர் பெற்றீர்? என்னை மணத்தாற் பெறு முன், பல பேரிடையில் முத்தமிட்டது முறை தவறாதகோ? [அழுகுரலோடு] யான் தங்களைத்தேடி அடைந்ததற்கு இதுவோ பலன்?

இளங்கோ:—ஏன் அழுகிறாய்? ஆ! செல்வி! இந்நாள் சென்று உன்னைக்கண்டது, உன் அழுகுரல் கேட்கவோ? உன் போன்று மனக்கிளர்ச்சியை மறைக்கக் கற்றறிகிலேன். நான் செய்தது தவறு; இதற்கு நீ விதிப்பதை ஏற்பேன்.

பங்கயச் செல்வி:—இஃது உண்மையா ?

இளங்கோ:— உண்மை; உண்மை.

பங்கயச்செல்வி:—அங்ஙனமாயின் தாங்கள் இங்கு வருக.

[இளங்கோ பங்கயச்செல்வியிடம் வருகிறான்:]—அரசே! இவ்விடம் அசையாது நிற்க வேண்டும்; நின்று உயரப் பார்க்கவேண்டும்; என்ன நேரினும் யான் யாது செய்யினும் தாங்கள் கீழே பார்த்தல் கூடாது; தாங்கள் அப்படி நின்ற பின் தாங்கள் செய்ததற்குத் தக்க தண்டனை விதிப்பேன். யான் எத்தண்டனை விதிப்பினும் அதனைப் பொறுத்தல் வேண்டும்.

இளங்கோ:—அங்ஙனமே செய்வேன்; யாது விதிப்பினும் பொறுப்பேன்.

பங்கயச்செல்வி:—முதலில் நான் சொல்லியவாறு நில்லுங்கள் பார்ப்போம்.

[இளங்கோ அசையாது நின்று மேல் நோக்கிப் பார்த்த வண்ணம் நிற்கின்றான். பங்கயச் செல்வி இளங்கோ கால்களில் விழுந்து வணங்குகிறாள்.]

பங்கயச் செல்வி:— [அழுகுரலோடு] பாண்டிய நாடும் யானும் தங்கள் அடைக்கலம்; அடைக்கலம் புகுந்தாரை அஞ்சாது ஆதரிப்பது உங்கள் கடன்.

இளங்கோ [பங்கயச்செல்வியை வாரி எடுத்துப்] பெருந்தவறிழைத்தாய் ; என்ன செய்தனை? என் அடியில் விழுவதோ உன் காதலுக் கிசைந்தது? என்ன நேர்ந்தது ? நீ அழுவதேன் ? அழுகையைத்தவிர் ;

நீ அழுவதைக்காண என் மனம் நோகின்றது; யார் என்ன தீமை செய்தனர்?

பங்கயச்செல்வி:—(கண்ணீர் விட்டு) நாகனார், என் தந்தையைக் கொன்றார்; என்னையும் கவர எத்தனித்தார்; கண்ணன்மாறனார் உதவியால், மறைந்து நான் இங்கு வந்து சேர்ந்தேன்.

இளங்கோ:—கொல்வேன் அவனை; உன்னைக் கொள்ளவோ நினைத்தான்! இவ்வெண்ணம் கொண்ட அவன் நெஞ்சைப் பிளப்பேன். பங்கயச் செல்வி! உன் துயரம் தவிர். என்னையடைந்தபின் உனக்குத் துன்பமேன்? உன்னையடைய, முன்பே நானே சென்றிலேன். என்னே என் பேதமை! ஆ! என் தந்தையின் தடையைப் பெரிதெனக் கருதினேன்; பேதையேன் பெருமையற்றேன்!

உனக்கு நேர்ந்த துன்பம் யாவும் என்னால். நேர்ந்தன; பஞ்சினும் பதைக்கும் நின் சீறடி, வழிநடை வருத்தம் எவ்விதம் பொறுத்தது? வழி தெரிந்து எங்ஙனம் வந்தாய்? நின் மாந்தளிர்மேனி மாசடைந்ததுவே! [பங்கயச்செல்வி வருத்தத்துடன் நிற்கிறாள்]

இளங்கோ:—[அமைச்சரைநோக்கி] என் காதலி உறைதற்கு ஓர் இருப்பிடம் விரைவில் தேர்வீர்.

[அமைச்சர்கள் போய்விடுகிறார்கள்]

ஆ! என்னன்பின் உருவே! பங்கயச்செல்வி! நீ வருந்துதல் ஒழிவாய். வளவனை அடைந்தும் வருந்து

தல் தகுமோ; இத்துவராடை உன் அழகினைக் குறைத்தது; என் பிழை பொறுத்து உள்ளே செல்வாய்; உடையினை மாற்றுவாய்; வழி நடை தந்த வருத்தம் ஆற்றுவாய்; உனக்கு உற்றவை யாவும் உணர விரும்புவேன். உடையினை மாற்றிய பின்பே அவையாவையும் கேட்டல் தகும். நீ எனை அடைந்தது யான் பண்ணிய புண்ணியமே! உள்ளே செல்வாய்.

[பங்கயச்செல்வி போய்விட இளங்கோ தனியே,]

ஆருயிர்க்காதலி! ... உன் வழி நடைத்துயர் மாற்றுதல் எளிதோ? மெல்லிய அடியால் கடுவழி நடந்தாய் ... வழி தெரியாது மயங்கி நின்றனையோ, ... காலின் முள் தைக்கவும் கற்கள் உறுத்தவும் கலங்கினையன்றோ? ... கடுவழி கடந்தறியாயே ... யார் துணைக்கொண்டு இவ்வூர் வழி தெரிந்தாய் ... யாரும் உடன் வரக் காண்கிலேன் ... திக்கற்றவளாய் நீ திரிய நேர்ந்ததோ? ... ஆ! கொடியேன்! பாவியேன்; யானே இத்துயரெலாம் தந்தேன்; என் தந்தை சொல் கேட்டேன்; நானுமோர் ஆண் மகனோ? ... போரிடை வென்று; என் காதலியைப் பெறக் கருதிய என்னை என் தந்தை தடுத்தனர்; என் காதலி கடுந்துயர் உறவும், கவலையால் வருந்தி கடுவழி நடந்து, என்னைக் காண வரும்வரை யான் காத்திருந்தது என் வீரம் பழிப்பது. என் காதலிக் குதவா வீரமும் ஆண்மையும் எதற்கோ? ஆ! இனியாவது எனக்குற்ற பழிப்பினைத் தீர்ப்பேன் ...... என் விருப்பின்படி போர் புரிய

என் தந்தை விடுவரோ? ... பொருளாம் ...... கருவி யாம் ....... காலமாம் ...... வினையாம் ....... இதனை எண்ணுவது என்று? துணிவது என்று? ...... புகழ் பெறுதற்கு இவை பொருந்துமோ ...... கான முயல் பெற இவைகளைக் கருதவேண்டும்; இவை யானை பிழைத்த வேல் ஏந்துதற் கிசையுமோ? ...... என்ன சொல்லியும் என் தந்தை இதை யுணர்ந்திலர் ...... என்னிடம் ஓர் சிறு படையேயுளது ....... சிறுபடை யாகிலென் பெரும் படையாகிலென் ? வெற்றி தருவது வீரமோ தொகையோ? ...... என் காதலி தனக்குக் கவலை தந்தவன் உரத்தைக் கலக்குவேன் ...... உயி ரைக் குடிப்பேன்;

## தந்தையைக் கொணரத் தன்மகன் எழுதல்

## XV

[விஜயநகரம்; அரண்மனை; கிருஷ்ணதேவராயர் வீற்றிருக்கிறார். அமைச்சர்கள், படைத்தலைவர்கள், மற்றுமுள்ளஅங்கத்தினர்கள் சூழ்ந்திருக்கின்றனர்]

கிருஷ்ணதேவராயர்:— (கையிலோர் கடிதத்துடன்) ஆ! இவனால் என் புகழுக்குக் குறைவு ஏற்பட்டது! குற்றமில்லா என் அரசியல் நலமும் இதனால் இழுக்குற்றது; ஆ! இவனை என்ன செய்யினும் தகும்.

படைத்தலைவரிலொருவன்:—அரசர் தம் அரசே! தாங்கள் இதுவரையில் இவ்வாறு துயர் மொழி பகர்ந்ததில்லை; தாங்கள் கூறியது யாரைக் குறித்தது? என்று தெரிவிக்கவேண்டுகிறேன்.

கி—தேவராயர்:— நம் நாகமனைக் குறித்தது, "காலமும் இடமும் மாறக் கருதிடும் குணமும் மாறும்" என்பது உண்மையாயிற்று. இவன் இக்கெடுதிகள் செய்வானென்று நான் கனவிலும் நினைந்திலேன்; இவன் வயது முதிரவும் ஆசையும் முதிர்ந்தது; இவன் ஆசைகள் அனைத்தையும் எங்கொளித்திருந்தான்! இந்நாள் வரையில் தனக்கென யாதும் என்னை வேண்டினதில்லை. இவனைத் தோற்றத்தால் மதித்ததால் என் தொல்புகழ் தொலைத்தேன். இவனை நன்கறிந்திருந்தேனாயின் இவனைத் தென் நாட்டிற்கு

அனுப்பியிரேன். அரசர்க்கு அரசியல் பணி செய்வோரால் ஆவதே உயர்வும் தாழ்வும். அவன் தீச் செயல்களைச் சொல்ல எனக்கே மனம் அழுங்குகிறது. ......... பாண்டியன் மனைவியும் மக்களும் இவைகளை எங்ஙனம் பொறுத்தார்களோ? பாண்டியன் மனைவி எழுதிய கடிதம் இது; இதனைப் பார்ப்பீர். (கடிதத்தை ஓர் அமைச்சர் பெறுகிறார்). இதனை எழுதிப் பத்து நாட்களாகின்றன; இதன் பின் அவன் என்னென்ன கொடுமைகள் செய்தானோ? ஆ! கொலை செய்யும் கொடியவனா இவன்! எனக்குச் சற்றும் இது தெரியாமற்போயிற்று. பாண்டியன் நாட்டினைக் கவரவும் அவன் மகளைக் கொள்ளவும் கருதியே பாண்டியனைக் கொன்றானும். ஆ! என்ன கொடுமை! ஆ! என்ன கொடுமை!! கொலை செய்தாருடன் கூட்டுறவு ஆகுமோ? தூயதோர் துறவியால் நம் செல்வம் சேர்ந்தது. நம் தூய்மை அகன்றிடில் நம் செல்வமும் அகன்றிடும்; என் அரசியின் தூய்மையைத் தொலைப்பது இதனின் வேறுண்டோ? இவனை என்ன செய்யத் தகும்?—ஆ!—இவனை என்னதான் செய்வேன்.

அமைச்சரிலொருவன்:—கொலை செய்தானுக்குக் கொலையே தண்டனை; அவனைப் பிடித்துக் கொணர்ந்து நம் படையெலாம் சேர்த்து அப்படைகள் முன் இவனைக் கொல்வதே தக்க தண்டனை. இத்தீய எண்ணம் மற்றவர்களிடம் பரவாமல் தடை செய்வதற்கும் இதுவே தக்க வழி.

கி—தேவராயர்:—தக்கதே சொன்னீர்; இதுவே தக்க தண்டனை; நம் படைத்தலைவரில் ஒருவர்சென்று அவரைக் கொணர்வீராக.

[ஓர் படைத் தலைவன் எழுந்து] அவர் படைத் தொழிலில் மிக்க வல்லவர்; நாங்கள் யாவரும் சேர்ந்து செல்லினும் அவருக்காற்றுதலரிது; அஃதன்றியும் அவரிடம் ஓர் படையும் உள்ளது. பாண்டியன் படைகளை அவர் முன்பே தன்வசமாக்கியிருப்பார். நாங்களே செல்லினும், படைகொண்டு செல்லினும் அவரைப் பிடித்தல் எளிதல்ல; அவர் இப்படையில் சேர்ந்த நாள் முதல் தோல்வியுற்றதே யில்லை; நாங்கள் சென்று, தோல்வியுற்று வருவதினும் செல்லாமலிருப்பதே நன்மை பயப்பது; அவரைத் தந்திரத்தால் தனியே இவ்விடம் வரச்செய்து, சிறையிலிட்டு அதன் பின் அவரைத் தண்டிப்பதே நாம் செய்யக்கூடியதாகும். இதனைக் கருதுமாறு வேண்டுகிறேன்.

மற்றோர்படைத்தலைவன் எழுந்து:—யானும் அதையே கூறுவேன்; நாங்கள் யாவரும் அவரிடம் போர்த்தொழில் கற்றவர்கள்; அவரை வெல்வது எங்களால் முடிந்ததன்று; அவரைத் தந்திரத்தால் இவ்விடம் தருவிப்பதே நன்மையாகும்.

கி—தேவராயர்:—என்ன சொன்னீர்? இதுவோ உம் வீரம்? தந்திரத்தால் அவனை ஏமாற்றுவதற்கு இயலுமோ? மூடனோ அவன்? படைத்தலைவர்களா நீங்கள்? நாகமன் இல்லையெனில் நம் நாடுமில்லையோ? வீரர்க

ளற்றதோ விஜயநகரம்? ஆ! .... இக்கொடியானைக் கொணர்தற்கு இங்கு ஒருவருமிலரோ.?

விஸ்வநாதன்:—அரசே! நானே கொணர்வேன், இதில் சிறிதும் ஐயம் வேண்டாம்; உதவிக்கு என் சிறு படையே போதும்' தந்தையராகிலென்? தாயராகிலென்? அரசியல் பிழைத்த பேரை அன்றே கொல்லுதல் வேண்டும்; தவறிழைத்தவரும் என் தந்தையாகுமோ? யான் விரைவில் சென்று வெற்றியுடன் மீள்வேன்; விடையளிக்கவேண்டுகிறேன்.

[அரசனைப் பணிகிறான்]

கி—தேவராயர்:—நீயே வீரருள் வீரன்; நீ தோற்றுத் திரும்பினும அத்தோல்வி பெரிதன்று; தலைவர்கள் அஞ்சிப் பதுங்கியபோது நீ செல்வேன் என எழுந்தது, நீ ஓர் உயரிய வீரன் என்பதைக் காட்டும்.

விஸ்வநாதன்:—(அரசரை மறுபடியும் பணிகிறான்) போய் வருமாறு விடையளிக்க வேண்டுகிறேன்.

கி—தேவராயர்:—நன்று, போய்வா; இங்குளார் யாரினும் நீயே சிறந்தவன்; வெற்றியே பெறுவாய், நீ வேண்டிய படையினை உன் உடன் கொண்டு செல். இறைவனருளால் வெற்றியே பெற்று விரைவில் திரும்புவாய்.

[விஸ்வநாதன் போய்விடக் கூட்டம் கலைகிறது]

கி—தேவராயர்:—(தனியே) இவன் வீரமே வீரம்! இவன் அன்பே அன்பு! தாயைத் தந்தையைப் பெரிதெனக் கருதிலன்; அரசியற்பணிக்கே தன் ஆருயிர் கொடுப்பவன் ஆ! ஆ!! இவனை ஓர் அரசனுக்கவும் தகும்.

## XVI

[உறந்தை; சோழன்அரண்மனை; மாலை.]

இளங்கோ:—பங்கயச்செல்வி ! நீ கொண்ட வேடம் உன்னை முற்றிலும் மறைத்தது; நான் உற்றுப்பார்க்குமுன் நீயெனச் சற்றும் தெரிந்திலேன்; அஃதோடு நீயும் பொய் கூறினை.

பங்கயச்செல்வி:—நான் பொய்யொன்றும் கூறவில்லையே.

இளங்கோ:—நீ 'உண்மைத் துறவி' யென்று உறுதி கூறினையன்றோ ?

பங்கயச்செல்வி:—ஆம்; நான் கூறியது உண்மையே. அதிற் பொய் ஒன்றுமில்லையே; நான் உண்மையைத் துறந்தேனல்லாது வேறுண்டோ ? உண்மையைத் துறந்தேனென்றுதான் நான் தங்களிடம் கூறியது.

இளங்கோ:—ஆஹா ! [நகைக்கிறார்] நான் இதனை முன்பே உணர்ந்திலேன்; உன் கூரிய அறிவே அறிவு; நாம் கற்கும்போதிருந்த அறிவின் கூர்மையே நீ இன்றும் பெற்றுளாய்; அரசியல் வேறு. அறிவியல் வேறு. என்னறிவெலாம் மழுங்கிற்று. என்னென்ன கவலை! என்னென்ன துன்பம் ! அல்லும் பகலும் அரசியல் பணியே என்னை அடிமை செய்தது; கற்கவும் கற்றன கருதவும் சற்றும் காலமே கண்டிலேன்;

இவ்வுலகியற் றன்பினால் உன்னறிவு சற்றும் மழுங்கிற் றில்லை; நீ அரசியல்கொண்டபின் இதனைப் பார்ப்பேன்.

பங்கயச்செல்வி :—யான் அரசியல் வேண்டிலேன் ; தங்களன்பே வேண்டுவேன்.

இளங்கோ:—நீ அரசியல் வேண்டாமெனில் உனையார் விடு பவர்? இதனைப் பின்பு பார்ப்பேன். நாம் கணக் காயனாரிடம் பாடம் கேட்டபோது அவர், † "அறி வறிந்த மக்கள்" என வள்ளுவர் கூறியது 'பெண் மக்களை யொழித்து, ஆண் மக்களையே குறிக்கும்' என்று கூறிய உரையை, நீ மறுத்ததை யான் மற வேன். அவர் தாம் கூறியது பரிமேலழகரின் உரையெனக் கூறியும் நீ கொண்டிலாய். பற்பல சான்றுகள் பகர்ந்து, அஃது அரிவையர் தமையும் குறிக் கும் என நாட்டினாய். 'நீயே அதற்குத் தக்க சான்றா யினை' என நம்கணக்காயனாரே வியந்துகூறினாரன்றோ? அழகர்தம் உரையை நீ அழகிலாதாக்கினாய்; இக்கூரிய அறிவே இன்னும் கொண்டுளாய்; அதனால் என்னை யும் ஏமாற்றினாய்.

பங்கயச்செல்வி:—தாங்கள் நச்சினார்க் கினியர்தனையே இன் னாராக்கியதை யான் மறந்திலேன்;

இளங்கோ:—அவர் பெயரே *"இனியார்" அன்றோ? யான் அவரை இன்னாராக்கவும் வேண்டுமோ? ஈதெல்லாம்

---

† திருக், அதி 3, செய் 1.
பரிமேலழகர் விசேடஉரை பார்க்க.

* இனியார் என்பது ஈண்டு எதிர்மறைப் பொருள் கருதியது.

பழங்கதை; அரசியல் பணியில் புகுந்தபின் இவற்றின் இனிமை அகன்றது; இவையெலாம் இன்றாயின.

[காவலன் வருகின்றான்] அரசே! பாண்டிநாட்டார் ஒருவர், வெளியே காத்திருக்கின்றார். அரசியாரைக் காணவேண்டுமாம்.

பங்கயச்செல்வி:—என்னைக் காணவேண்டுபவரும் பாண்டிய நாட்டிலுளரோ? அவர் பெயரென்ன?

காவலன்:—வல்லபன் என்றான்.

பங்கயச்செல்வி:—ஆ! என் அண்ணா! (ஓடுகிறாள்) அண்ணா! வருக! அரசே! வருக [வாயில்வரை சென்று வல்லபனுடன் வருகிறாள்.]

பங்கயச் செல்வி:—அண்ணா! இவரே என் காதலர் [இளங்கோவை நோக்கி] நாதா இவரே என் உடன்பிறந்தார். என்னைத் தங்களுக்கு ஈந்தவர் இவரே.

இளங்கோ:—[எழுந்திருந்து] வருக; வருக; மாறனார் வருக. தங்களால் என் காதலியைப் பெற்றேன்; தங்களுதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றலரிது. ஆசனத்தமர்க, அமர்க.

[ஆசனத்திலமர்கிறார்]

பங்கயச் செல்வி:—அண்ணா! தாங்கள் வைகை வெள்ளத்தினின்று எப்படிப் பிழைத்தீர் [அழுகுரலோடு] என்னால் உங்களுக்கு ,என்னென்ன துன்பங்கள் நேர்ந்தன. பலருக்கும் துன்பம் தந்த நான் பெரும் பாவி. [இளங்கோவை நோக்கி] நாதா! என் உடன்

பிறந்தார் உதவிக்குத் தாங்கள் வையகமும் வானகமும் ஆற்றலரிது என்று சொன்னீர்கள்; வையகத்தைக் கொடுத்தபின்அன்றோ அஃது ஆற்றும் ஆற்றாது என்று சொல்லக்கூடும். அதற்கு முன் கூறுவதெல்லாம் முகமன் வழக்கு.

[பங்கயச் செல்வி உள்ளே செல்கின்றாள். அரசமுடி ஒன்றினை எடுத்துவந்து வல்லபன் தலையில் சூட்டுகிறாள்.]

பங்கயச் செல்வி:—அண்ணா! இன்று முதல் நீர் வல்லபபாண்டியனானீர்; பாண்டிய நாடெலாம் இன்று முதல் தங்களுடையது; இதனைத் தள்ளாது ஏற்குமாறு வேண்டுகிறேன்.

வல்லபன்:—அம்மணி! யான் உழைத்ததெல்லாம் கூலியின் பொருட்டோ? யான் ஊர் வேண்டேன், பேர் வேண்டேன்; என்னுயிர் உள்ள வரையில் தங்களுக்குத் தொண்டிழைப்பதே என் கடன். யான் இதை ஏற்பின் என் அன்னையின் மொழி பிழைத்தவனாவேன். தங்களைப் பாண்டிய நாட்டிற்கு அரசியாராக்கவே எங்கள் முயற்சி; அவ்வரசை எனக்களித்து இதனைத் தவிர்ப்பதோ தங்கள் கருமம்?

பங்கயச்செல்வி:—அரசன் மகளாகி யான் பட்டது போதும்; அரசியானபின் யான் பெறும் துன்பம் பொறுத்தற்கு வல்லமை பெற்றிலேன்; யான் ஓர் வேடன் மகளாயினும் வேண்டியாங்கெய்தி இன்புற்றிருப்பேன். என்னே அவர் தம் அன்பும் அமைதிகொள் வாழ்வும்!

வல்லபன்:—அம்மணி! அங்ஙனம் கூறுதல் தவறு. வேடர் தம் கவலை வேடர்க்கே தெரியும்; தாங்கள் அதனை எங்ஙனம் அறிதல் கூடும். மானிட வாழ்வுபெற்று மகிழ்ந்திருந்தாருமுண்டோ? கற்ற அறிவால் இதனைத் தாங்கள் கடிதல் தவறு. (இளங்கோவை நோக்கி) அரசே! தாங்கள் அரசியாருக்கு நன்மதி கூற வேண்டு வேன். தாங்களே அரசியை மணந்து இவ்வரசினை யடையத்தகும். யான் சற்றும் இதை வேண்டேன். [அம்முடியினை வல்லபன் தலையிற் சூட்டுகிறான்] தாங்களே எங்களுக்கு அரசரானீர்.

இளங்கோ:—பங்கயச்செல்வி! நீ செய்தது தவறு; வையகமும் வானகமும் ஆற்றலரிது என யான் முகமன் கூறியதாகவோ நினைத்தாய்! பாண்டியன் அரசை அளித்தற்கு நீ உரிமை பெற்றிலாய்; நீயும், பாண்டி நன் நாடும் என்னடைக்கலம் என்று நீ அன்றே கூறினாய் அன்றோ? அவ்வடைக்கலப் பொருளை அளித் தற்கு உனக்குரிமையும் உண்டோ? அதனைக் காத் தளிப்பது என கடன்; [வல்லபனை நோக்கி] பங்கயச் செல்வி அறியாதுசெய்தனள். யானே என் பொருட்டும் என் காதலி பொருட்டும் இதனை உனக்களிப்பேன். [எழுந்து வல்லபன் தலையில் முடிசூட்டுகிறான்.]

ஐய! இஃது உன் உதவிக்கு ஏற்றதொன்றன்று என் காதலியன்றி எனக்கு வேறெதுவும் வேண்டுமோ? காதலியைப் பெறக் கனன்றெழாக் கசடன் யான்... பெற்றோர்க்கடங்கிய பேதையேன்... என் காதலியை நீர் காத்தளித்த கருணைக்கு அரசொன்றோ ஏற்றது?

என் நாட்டினையும் நீரே பெறுவீர்; ஆயினும் யான் அதனையும் இன்றே அளித்தற்கு இன்னும் உரிமை பெற்றிலேன்.

பங்கயச்செல்வி:—[களிப்புடன் எழுந்து] அண்ணு! இப்போது தாங்கள் இதனை மறுப்பதற்குரிமை பெற்றிலீர்; யாங்கள் இந்நாட்டினைப் பெற்ற பிறகு, தாங்களே பெறுவீர். யாங்கள் அரசும் வேண்டிலோம்; அல்லலும் வேண்டிலோம்.

வல்லபன்:—தாங்கள் என்ன கூறியும் யான் இதனைப் பெறேன்; அரசியல் கொள்வது அல்லல் விளைப்பது, எனத் தாங்களே துணிந்தனிர். தாங்களே என்னை அவ்வல்லலில் ஆழ்த்துதல் தகுமோ?

[அம்முடியினை ஓர் ஆதனத்திலிடுகிறான்] இன்னும் யானே இதனைத் தாங்கநேரின் யான் பாதுகை வேண்டுவதன்றி இதனைப் பெறுதலும் நிகழுமோ? இதைப் பற்றி நாம் கருதுதற்குப் போதிய காலமுளது; இதனைப் பின்பு கருதுவோமாக; நாம் இன்று கருதத் தக்கன பற்பல உள. நான் வைகையிற் குதித்த பொழுது வெள்ளத்தின் வேகத்தால் என்ன முயன்றும் வைகையின் வடகரை எய்தற்கு வலியற்றேன்; தென் கரை ஓரமே ஒதுக்கப்பட்டேன்; நள்ளிரவாகும் வரையில் நான் எழுந்து நடத்தற்கு இயலவில்லை. பின்பு எழுந்து மதுரை சென்றேன்; ஆங்கு என் நண்பரால், நாகனார் சிற்றரசர்களை ஏமாற்றித் தங்கள்மேல் அவர்கள் துணையுடன் படையெடுத்துச் செல்லத் துணிந்தன

னதை அறிந்தேன். அதன் பின் வைகையின் தென் கரையுற்று என் அன்னையைத் தேடி மலையெலாம் காடெலாம் திரிந்தேன்; இந்நாள் ஆயிற்று. இவ்வூர் வந்தபின் என் அன்னை ஈங்கெய்தியது அறிந்தேன்; நாகனார் படை திரட்டிப் போருக் கெழுந்தனர்; அவர் படை இன்றோ நாளையோ இங்கெய்திடும். இனி யாம் போர்க்குரியது கருதற்பாலது. மற்றொன்றையும் கருதிக் காலம் தாழ்க்காது இதனைக் கருதுவோமாக.

பங்கயச்செல்வி:—அண்ணா! தாங்கள் மதுரைக்கு மீண்டும் சென்றதாய்க் கூறினீர்கள். தங்கள் அன்னையும் தங்களைப்பிரிந்து எங்ஙனமுளார்? என் அன்னையும் சுகமே போலும்.

வல்லபன்:—[அழுகுரலோடு] தங்கள் அன்னையார், துக்கத்தைப்பொறாது தாமே தம்மை மடித்துக்கொண்டனர்.

பங்கயச்செல்வி:— ( அழுகிறாள் ) ஆ! என் அன்னாய்! அன்னாய்!! எப்பாடு பட்டனையோ? ... எனை நினைந்து அழுதையோ? ...... உன்னருகிலாப் பாவியேன்...... எனை ஈன்றதால் உனக்கென்ன பயன்? ... ... என்னை நினைந்தாயோ? ....... என் தந்தையுமிழந்தேன். என் தாயுமிழந்தேன். ஆ! (அழுகிறாள்)

இளங்கோ:—பங்கயச்செல்வி! நீ அழவேண்டாம்; அழுவதால் உனது தாயை மீண்டும் பெறுவையோ? என் மனம் கலங்குகிறது; நீ சற்று அழாதிரு. ...... நீ சற்று அழாதிரு. இடுக்கண் வருங்கால் நகைத்து அதை நடுங்கச்செய்தலேநலம் [தேற்றுகிறான்] அழுதல்

தருமோ? .... செல்வி! அழாதிரு. [பங்கயச்செல்வியைத் தேற்றி வல்லபனை நோக்கி] ஐய! அரசியார் ஏன் தாமே மடிந்தனர்? நாகனுரால் ஏதுவும் தீங்குகள் நேர்ந்தனவோ?

வல்லபன்:—அரசே! (அழுகையோடு) என் அன்னை பாண்டிமாதேவிக்குத் துணையிருந்தனர்; பாவியின் படைஞர் என் அன்னையை அடித்துக்கொன்றனர்.

பங்கயச்செல்வி:—ஆ! (அழுகிறுள்) அங்கயற்கண்ணி அம்மா! நீயுமோ இறந்தாய்...உனக்கேன் இத்துன்பமெலாம்... ஐயோ! எங்கள் பொருட்டுத் தக்கோரெல்லாம் மாண்டனர். அண்ணு! தாங்கள் எங்ஙனம் இதனைத் தாங்குவீர்?... இழந்த எதனையும் மீண்டும் பெறலாம். தங்கள் அன்னையை எங்ஙனம் பெறுவீர்? என்னலன்றே தங்களுக்கு இத்துணைத்துன்பம்; ஆ! நல்வினை செய்திலாதேன் ... அண்ணு! இதனை எங்ஙனம் பொறுப்பீர் (அழுகுரலோடு) அண்ணு! என் அன்னை அதனைப் பார்த்துக்கொண்டோ இருந்தார். அதனைத் தடுக்கவில்லையா?

வல்லபன்:—அவர் அறியுமுன் அடித்துக்கொன்றனர்; இத்துக்கத்தைத் தேவியார் பொறுத்தற்கியலாது அறிவு மாறினர். பின் தாமே தம்மை மடித்துக்கொண்டனர். [அழுகுரலொடு] இதற்கு நாம் என் செய்வோம்! தாங்கள் வருந்தவேண்டாம்.

பங்கயச்செல்வி:—(அழுகிறுள்) ஆ! கொடிது! கொடிது!! யான் எங்ஙனம் இதனைப் பொறுப்பேன்! இதனைப்

பொறுப்பேன்! ஆ! நல்லோரெல்லாம் என்றால் மாண்டனர்; ஆ! அங்கயற்கண்ணி! அம்மா! உன் மகனை நினைந்தாயோ! கொடியேன் தன்னால் உன் மகன் உன்னிடமிருந்திலன்...ஆண் மகவில்லா என் அன்னை இறந்ததைத் தடுப்பாரில்லையோ? மகனைப் பெற்ற நீ மாண்டது தகுமோ?—உன் மகன் அருகில் இருந்தால் நீ மாண்டிராய்; மாண்டிராய்—என்றால் உன்றன் மகனையனுப்பினை; எங்களால் ஓர் நலம் பெற்றிலாய்; உயிரையே ஈந்தாய். ஆ! என் செய்வேன்.

இளங்கோ:—பங்கயச்செல்வி! இது கொடிதினும் கொடிதே; நீ வருந்துதல் எதற்கோ? வருத்தப்படுதல் அங்கயற்கண்ணியார் மீண்டும் வருதற்கோ? உற்று நோக்கின் நமக்கு நாமே யழுதல் தகும். நம் பாலராம் தன்மை செத்தது; காளையாம் பருவம் சாரும்; காமுறு இளமை சாரும்; நாளும் நாம் சாகின்றோமே நமக்கு நாம் அழாததென்னோ! நீ அழுகையைத் தவிர்! "போவது விதியெனில் யாவும் போய்விடும்" உறுவதை நீக்க ஒருவருக் காகுமோ? விடு விடு துயரமெல்லாம்; "தீங்கு வந்தடையுமாறும் நன்மைதான் சேருமாறும் தாங்கள் செய்வினையினாலே, ஈங்கு இவை பிறரால் வாரா." நீ பிறரை நோவதேன்? வருவனவெல்லாம் வருக; போவனவெல்லாம் போக என நீ திடமுற்றிரு; கலக்கம் கொள்ளேல்.

பங்கயச் செல்வி:—(அழுகையோடு) நாதா! அங்கயற்கண்ணிக்குக் கற்சிலை எடுக்க வேண்டுவேன்; அவரை யான்

என்றும் தொழுதல் வேண்டும். (அழுகிறாள்) தெய்வக் கற்பினள், தீ தொன்று மறியாள்; என்றால் தீதெல்லாம் உற்றாள்.

இளங்கோ:—அங்ஙனமே செய்வேன்; நல்லோர் போற்றலில் நாமும் நல்லோர் ஆவோம்; ஆ! கண்ணனார் உதவியே உதவி. தனக்கென வாழார் பிறர்க்கென வாழ்பர், கண்ணனார் உதவி கடலினும் பெரிது. [போர்ப் பறை கேட்கின்றது; யாவரும் திடுக்கிட்டு எழுகின்றனர்]

ஓர் பணியாள்:—[ஓடிவந்து] நாகனார் படை தோன்றிற்று... படை தோன்றிற்று ... கோட்டையின் மீதுள்ளார் கண்டனர்.

இளங்கோ:—பங்கயச்செல்வி! நீ வருந்துதல் வேண்டாம், நானும் வல்லபனும் சென்று போர்க்குரியன செய்து மீள்வோம்; நீ வருந்தாதிரு; நீ வருந்தாதிரு.

பங்கயச்செல்வி:—இளங்கோவிடம் சென்று (அழுகையோடு) நாதா! நானும் தங்களுடன் போர்க்கெழுவேன். நான் தங்களைப் பிரிந்திரேன். பிரிந்திருந்து நான் பட்டதெல்லாம் போதும், என் பயம் தீர்த்து என்னை உடன் கொண்டேக வேண்டுகிறேன் ...

இளங்கோ:—பங்கயச்செல்வி உனக்கினிப் பயமேன்; உன்னை யான் பிரியேன்; இதுவே உறுதி, நீ போர்வினை பயின்றுளாய் என்பதை அறிவேன்; உன்னை உடன்கொண்டேகுவேன்; நீ ஒன்றுறிற்கும் வருந்தேல்.

[வல்லபனும் இளங்கோவும் போய்விடுகிறார்கள்]

# வேற்றுமைவிளைக்க விரும்பியதன்மை

## XVII

[அரங்காமாநகரம்; காவேரிக்கரையோரம்;

கண்ணன்மாறனார் தனியே உலாவிக்கொண்டிருக்கிறார்]

கண்ணன்மாறனார்:—ஆ! என் முயற்சிகள் யாவும் வீணாவனவோ ...... சோழனார் அவர் சிற்றரசர் பாலுள்ள படையெல்லாம் திரட்டித் தாம் உறந்தைக்கு வருவதாய்க் கூறினர். உறந்தையிற் சென்று இளங்கோவிடம் இதனைக் கூற என்னையே அனுப்பினர் .... நான் இங்கு வந்ததும் நன்மையே யாயிற்று .... எதிர்பாராவகையில் நாகனாரும் படையெடுத்து வந்துளார்; சோழனார் வருமுன் போர் நிகழுமோ? ...... நிகழும் ... நிகழும் ... நாளையே போர் செய்யப் புகுவர். போருக்கு யாவரும் தயாராயினர் ...... இளங்கோ, தம்மிடம் ஓர் சிறு படையே யுளது என்று கூறினார். பாண்டியன் படையும் நாகனார் படையும் சேர்ந்து, இதனைத் தாக்கில் இளங்கோ தோற்பார் என்பது திண்ணம். ஆ! நான் செய்தனவெல்லாம் வீணாகுமே! ... வீணாகுமே! ... என் செய்வேன் [ஒன்றும் தோன்றாது சற்று நிற்கிறார்]

இக்கொலை செய்தானோடு பாண்டியன் படையும் சேர்ந்து கொண்டதே! சிற்றரசர்களும் அவனுடன் போர்க்கெழ இசைந்தார்களே! நன்றல்ல செய்தா

னுடன் போர்க்கெழ இவர்கள் துணிவார்களோ? நாகனார் இவர்களை ஏமாற்றி யிருத்தல் வேண்டும். தாம் செய்வது தக்கது என்றுணர்ந்தே அவர்கள் இப்போர்க்குடன்பட்டிருத்தல் வேண்டும் ... இவர் செயல் தகாது என யார் இதனை உணர்த்துதல் கூடும்; யானே கொன்றவன் என என்னைக் கொல்லக் கருதினன் என்பதை அறிவேன். சிற்றரசர்களும், யானே கொன்றவன் என்று துணிந்துளார் என்பதும் பெறப்படும்; இலையேல் நாகனாரை நல்லோன் எனக் கொண்டு அவருடன் போர்க்கெழுதல் நிகழுமோ?... யான் இச்சிற்றரசர்களுக்கு இப்போது எத்துணை கூறினும் 'யான் கொன்றவனல்லன்' என்பதைக் கொள்வார்களோ? ... அவர்கள் நான் சொல்வதை நம்பினால் நாகனாருடன் ஒத்துப் போர்புரியாதிருத்தல் கூடும் ... அங்ஙனமாயின் இளங்கோ படை வெல்லும் என்பது திண்ணம் ... இதுவல்லால் வேறு வழியில்லை. யானே சென்று அவர்கட்கு நாகனார் தக்கோன் அல்லனென் பதை உணர்த்துவேன் ... (சற்று நின்று கருதுகிறார்.)

பாண்டியன் படையிலுள்ளார் யாவரும் என்னை நன்றாய் அறிவர்...எனைக்கண்டவுடன் கொலைஞன் என்று எனைப் பிடித்துக் கொள்வர் ... யான் சிற்றரசர்களைக் கண்டு கூறுமுன் என்னை நாகனார் கொல்வாராயின் என் செய்வேன் ... என் உயிர் பெரிதல்ல ; என்னைக் கொன்றால் கொல்லட்டும் ... நான் எப்படியாவது சிற்றரசர்கள் காணும்படி அவர்கள் முன் போகின்றேன். பின்பு எது நேரினும் நேருக. "ஆவது விதியெனில் அனைத்து மாகிடும்." [போய்விடுகின்றார்.]

# குற்றமற்றேனெனக் கூறியபண்பு

## XVIII

[அரக்கமாநகர்; மாலை; நாகனூர் படை ஓர் புறமிருத்தல்; பாண்டியன் படை மற்றோர் புறமிருத்தல்; சிற்றரசர்கள் அணி வகுத்தல் கருதக் கூடியுள்ளனர்; காவலன் ஒருவன் காவல்செய்து சுற்றி வருகிறான்.]

[கண்ணன்மாறனூர் வருதல்]

காவலன்:—*யார் போவது நில்.*

கண்ணன்மாறனூர்:—*நண்பன்.*

காவலன்:—*நண்பனுகில் செல். நண்பனு?*

[மாறனூர் அருகில் வருகிறார்]

*ஓ! மாறனூர்! கொலைசெய்தவர் அகப்பட்டார்! கொலை செய்தவர் அகப்பட்டார்!* [*மாறனுரைப் பிடித்துக் கொள்கிறான்.*] [சிற்றரசர்கள் ஓடி வருகிறார்கள்]

சிற்றரசரில் ஒருவர்:—*மாறனூர் அகப்பட்டார்; மாறனூர் அகப் பட்டார்.*

மற்றோர் சிற்றரசன்:—*உண்மை, உண்மை; மாறனூர், மாறனூர்.*

மற்றோர் சிற்றரசன்:—*கொல்வீர் உடனே, கொல்வீர்உடனே.*

[*சிற்றரசர்களில் சிலர் மாறனுரை இழுத்துச்செல்கின்றனர்*].

மாறனூர்:—*ஐய! தாங்கள் என்னைக் கொல்வதற்கு நான் அஞ்சினுல், நானே இவ்விடம் வருதல் கூடுமோ? என்*

நாட்டாராகிய தங்களால் கொல்லப்படுவதைவிட நான் பெறும் பேறு வேறு யாதுளது.

ஓர் சிற்றரசன்:—கொலை செய்தாரை யார் கொன்றாலென்ன, கொல்வீர் உடனே; கொல்வீர் உடனே.

மற்றோர் சிற்றரசன் :—இவரை நாகனிடம் கொண்டு போவோம்.

கண்ணன் மாறனார்:—கொல்வதானால் என்னை யார் கொன்றாலென்ன? கொலை செய்தேனெனில் நான் கொல்லப் படவேண்டும். குற்றம் செய்தவரைத் தண்டியாது விடுதலும் தவறு; குற்றம் செய்யாதவரைத் தண்டித் தலும் தவறு.

ஓர் சிற்றரசன்:—நீர் குற்றம் செய்யவில்லை என்று இப்போது சொல்ல வந்தீர் போலும். நாங்கள் மூடர்களென்பதோ உம் எண்ணம். கொன்றுவிட்டோடிய நீர் இன்று வந்து யாதும் சொல்வது ஏற்குமோ?

கண்ணன் மாறனார்:—நான் குற்றம் செய்யவில்லை யென்று நான் சொல்லவில்லை. நீங்களே நன்றாக விசாரித்தபின் இதன் உண்மையைத் தெரிந்துகொள்வீர். குற்றம் என் பேரிலாயின் நான் தாங்கள் விதித்ததற்கு உட்படு கிறேன். தாங்கள் விதிக்கும் தண்டனைக்குட் படுவதற் காகவே நான் இங்கு வந்துள்ளேன். நான் செய்த குற்றத்தை மறைக்க முடியுமோ. தங்களுக்கு அதனை யொளிக்கினும் எனைப் படைத்தோனுக்கு அதை ஒளித்தல் கூடுமோ? தாங்கள் யாதொன்றுவது கருதி என்னைத் தண்டியாமல் விடினும் கடவுள் தண்டிப்பா

ரென்பதை நான் உங்களுக்குச் சொல்லவும் வேண்டுமோ?

ஓர் சிற்றரசன்:—நாங்கள் விசாரியாமல் துணிந்தோம் என்றோ நீர் சொல்கிறீர்? நன்றாக விசாரித்துள்ளோம். நடந்தவை யாவும் அறிந்தோம். நீரே அரசரைக் கொலை செய்தீரென்று கண்டோம். அதற்கு உம்மைக் கொல்வதே தகுதி என்று துணிந்துள்ளோம். உம் காவற்காரன் உடலிலும் உடையிலும் இரத்தம் தோய்ந்திருந்தது. இரத்தம் தோய்ந்த வாளுடன் அவன் பிடிபட்டான். அவனை அரசன் படுக்கை அறைக்குள் செல்லென ஏவியது நீரென ஒப்புக்கொண்டீர். கொலையுண்ட அக்கணமே நீர் மறைந்தீர், மறுநாள் யாமெலாம் மதுரை எய்துமுன் உன் மகன் இளவரசியாரை ஏமாற்றி அவரை எங்கோ கொண்டு வைத்துள்ளான். இவையெலாம் உம் சூழ்ச்சியே. இளவரசியை உன் மகனுக்கு மணந்து அவனைப் பாண்டிநாட்டிற்கு அரசனாக்கக் கருதியே நீர் இச்சூழ்ச்சிகள் செய்து அரசனைக் கொன்றீர் என்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ? இனி இதைப்பற்றி ஆராய்தற்கு இடமில்லை. நீர் கொல்லப்படுவதற்குத் தயாராவீர். குற்றத்திற்கு ஏற்ற தண்டனையைப்பெற நீரே வந்ததற்கு நாங்கள் பெரிதும் மகிழ்ந்தோம். விரைவில் தயாராவீர்.

கண்ணன்மாறனார்:—அங்ஙனமே தயாராகிறேன். தாங்கள் நடந்ததாய்க் கூறியது யாவும் உண்மை. அவற்றில் எதனையும் மறுக்கிலேன். ஆனால் இவற்றினின்றும் தாங்கள் உய்த்துணர்ந்த முடிவே தவறுடைத்து.

என்பதை யான் உணர்த்த வல்லேன். ஒருவர்தம் மொழியே தாங்கள் கேட்டது. என் மொழியையும் தாங்கள் கேட்ட பின்பு என்னைக் கொல்லவேண்டு மானல் யாதொரு தடையுமின்றிக் கொல்லுங்கள். இதே யான் வேண்டுவது. யான் தங்களிடம் உயிர் இரத்தற்கு வரவில்லை. உண்மையை விளக்கவே வந்துளேன்.

ஓர் சிற்றரசன்:—இவர் சொல்வதையும் கேட்போம்.

மற்ருேர் சிற்றரசன்:—ஆயின் சொல்வீர் விரைந்து.

கண்ணன்மாறனர்:—முதலில் யான் கண்டன கண்டவாறு கூறுவேன். அரசன் கொலையுண்டபோது நான் மெய்க் காப்புத் தலைவனென்பதை யுணர்வீர். அரசன் இருக் கைக்கு அடுத்துறங்கினேன். நடு இரவானபோது அரசனிருக்கையில் ஓர் பெருங்குரல் கேட்டது. யான் அங்குச்சென்றேன். காவலாளன் அயர்ந்துறங்கினன்; அவனையெழுப்பி அரசன் படுக்கையறைக்குள் சென்று அரசர் சுகமேயுறங்குகிருரா என்று பார்க்க ஏவினேன். அவன் உள்ளே சென்றபொழுது திம்மன் வெளியே நழுவினன். அப்போது நான் அவனைப் பிடித்துக் கொண்டேன். அவன் மேல் இரத்தத் துளிகள் பட்டிருந்தன என்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள். காவலாளன் அரசனிறந்திருப்பதைக் கண்டு அவரைத் தூக்கி அவர்மீது தைத்திருந்த வாளையுருவிக்கொண்டு வெளியே வந்தான். இருவர், படுக்கை யறையினின்று வெளி வந்தவர்கள் என்பதுயாவராலும் ஒப்புக்கொள்

ளப்பட்டது. அவர்களில் யாவர் கொலை செய்திருக்கக் கூடும் என்பது கருதற்குரியது. கொலை செய்தா னொருவன் தன்மேல் அக்கொலைக்குறிகளில்லாது தப்பு வதற்கு முயல்வனே அல்லது தன் உடலெல்லாம் உடை யெல்லாம் இரத்தத்தைப் பூசிக்கொண்டு, இரத்தம் தோய்ந்த வாளுடன் அழுதுகொண்டு நிற்பதோ கொலை செய்தவரின் இயற்கை? யான் என் மகன் அரசெய்துமாறு இதனைச் செய்தே னென்றும் அதற்குச்சான்று என் மகன் இளவரசியைக் கொண்டு சென்றதெனவும் சொன்னீர். இளவரசியை யழைத் துச் சென்றதால் மாத்திரம் இளவரசியை மணம் செய்யக் கருதினதாகக் கொள்ளத்தகுமோ? அவரை உற்றார் பால் கொண்டு சேர்ப்பதற்கு அழைத்துச் சென்றான் என்று ஏன் கொள்ளுதல் தகாது. இளவ ரசியும் சோழன் இளங்கோவும் மதுரைக் கணக்காய ரிடம் அவர் மாணவர்களோடு கூடத் தமிழ் கற்றனர் என்பதை உணர்வீர். அந்நாள் முதற்கொண்டு ஒருவரை யொருவர் காதலித்தனர். அக்காதலர்பால் கொண்டு சேர்ப்பதற்கே என் மகன் அழைத்துச் சென்றான். அல்லது நம்மிளவரசியார், வெண்ணெய்க் குன்றெறியுற் றென்ன விரைந்து பின் ஏகத் தக்கவர் என்றோ கொண்டீர்? அரசியார் ஆண்தகைத்தேவி என்பதை அறிவீர்.

சிற்றரசர்களிலொருவன்:—ஓர் கன்னியும் குமரனும் தனி வழிச் சென்று பற்பல தனி இடங்களில் ஒன்றாய்

வதிந்து செல்லின் இது நல்லொழுக்கமென்பதோ உம் துணிபு?

கண்ணன்மாறனார்:—அங்ஙனம் சென்றதாய்க் கூறியது யார்?

ஓர் சிற்றரசன்:—ஒற்றர்கள்.

கண்ணன்மாறனார்:—ஒற்றர்களை நீவிர் நேரே கேட்டிலீர் என்றே கருதுகிறேன். இது நாகனார் கூறியதாகவேண்டும். அங்ஙனம் கூறியது உண்மையன்று என்பதைக் கொள்வீர். என் மகன் இளவரசியாரைக் கூட்டிச் செல்கையில் ஆற்றின் வெள்ளத்தில் குதித்தானென்பதை உணர்வீரன்றோ?

ஓர்சிற்றரசன்:—குதித்தால் என்ன. பின்பு அக்கரை சேர்ந்து அவரை அடைதலரிதோ?

கண்ணன்மாறனார்:—அரிதன்று; ஆயினும் அங்ஙனம் உண்மையில் நடைபெறவில்லை. ஓர் குறமாதின் துணைகொண்டு அரசியார் இளங்கோவையடைந்தார். என் மகன் அவரைக் காணாது அலைந்து பல நாள் சென்றபின் இளங்கோவிடமே அரசியாரைக் கண்டனன். இஃது உண்மையற்றனவென நீங்கள் கொள்ளினும், ஒற்றர் கூறியதாகச் சொல்லியது உண்மையேயாயினும் இஃது மணத்தினைக் கருதியது என்று எங்ஙனம் பெறப்படும். உங்களில் பலரும் மகளிரைப்பெற்றுள்ளீர்கள். உங்கள் மக்களை அவருடன் ... பிறந்தாருடன் தனிவழி அனுப்ப நேரின் அதில் ஐயுறுதலும் உளவாமோ? இங்ஙனம், எங்கோர் அரசர் கூறியாங்கு

என் மகன் அரசியாரோடு தனியிடத்தில் தங்க நேர்ந்திருப்பினும் அவரை ஓரிடத்திருத்தி "கங்குலின் எல்லை காண்பான் கண்விழித்தயலே நிற்பன்" என்பது உறுதி. ஐய! அங்ஙனம் மணவினை கருதினன் எனில் அரசியாரை அவர் காதலர்பால் கொண்டு சேர்த்ததன் காரணம் என்னோ?

ஓர் சிற்றரசன்:--அரசியார் இளங்கோவிடமோ உள்ளார்? நாங்கள் அறிந்திலோம்.

கண்ணன்மாறனார்:—நீங்கள், நான் அவ்விடம் அரசர் கொலையுண்டவுடனே சென்றதைக்குறித்துக் கூறினீர். அங்ஙனம் யான் சென்றது இளவரசியைக் காக்கும் பொருட்டேயன்றி வேறல்ல. யான் உடனே சென்று இளவரசியை என் மகனுடன், இளங்கோவிடம் அனுப்பாமலிருந்தேனாயினும் அல்லது சற்றுத்தாமதம் செய்திருந்தேனாயினும் அவர் நாகனார் கைப்பட்டு அவர் மகனுக்கு மணமுடிக்கப்பெற்றிருப்பர்; அல்லது என்ன நேர்ந்திருக்குமோ யான் சொல்லத் தக்கதில்லை இங்ஙனம் செய்வாரென்று யான் எவ்விதம் ஐயங்கொண்டேன் என்பதையும் தாங்கள் அறியவேண்டும். இம்மணம் முடியுமோ என்று எத்தனை சோதிடர்களை நாகனார் மதுரையில் கேட்டுளார்? யான் மதுரைக்குச் செல்ல நேரினும் அவர்களை யான் காண்பிப்பேன். நாகனார் விஜயநகரத்தரசனிடம் ஓர் படைத்தலைவர் என்பதை யறிவீர். அவர் சிறு வயது முதல் அவ்வரசர்க்குழைத்தும் அவ்வரசர் இவரை ஓர் நாட்டிற்கும் அரசராக்கினரில்லை. அவர் அனுமதியின்றி இவர்

தனியரசு எய்திடின் இவர் சிறையில் இடப்படுவா ரென்பது திண்ணம். மணவினை முடித்து மணமகள் மூலம் இந்நாட்டினைப் பெறின் ஒருவரும் ஒன்றும் செய்தற்கியலாது. பாண்டியன் இம்மணத்தினைப் பன்முறை மறுத்தார் என்பதும் அறிவீர். இம்மணத் தினைக் கருதியே இச்சூழ்ச்சிகள் நாகனூர் செய்தனர். அரசன் அயலிடம் சேர்ந்திருந்தனர். சிற்றரசர்களும் ஒற்றுமையிலாது பேசினர். யாராவது ஒருவர் மீது இப்பழியினைச் சுமத்தலாமென்றே இக்கொலை புரிந்தனர். மெய்காப்புத் தலைவராகயானிருக்கவும் இவர் தமிழ் தெரியா ஒருவனை அரசனைப் பார்த்துவர அனுப்பினுரென்பது நம்பத்தக்கதோ ? பார்க்கச்சென் றவன் மீது இரத்தத் துளிகள் யிருக்கக் காரண மென்னே? தன் மீது இரத்தம் படாது, தான் கொலை செய்திருந்தும் தான் குத்திய குத்துக்களால் சில துளிகள் சிதறி இவன்மேல் பட்டிருக்கின்றன. இங்ஙன மல்லாது வேறு எவ்விதம் இரத்தத்துளிகள் இவன்மேல் பட்டன? படைத்தலைமை எனக்கில்லை யென்பதால் யான் என்ன இழந்துள்ளேன். ஓர் சிறு படையன்றி போர்க் கெழும் படைகள் யாவும் உங்கள் வயமுள்ளன. நீங்கள் படைகளை யனுப்பின் யான் அவைகளைப் போருக்கு நடத்திச் செல்லுதல் கூடும். படைத்தலை வனுயினும் யான் பெறுவது சம்பளம் ஒன்றே. தங்க ளிடம் இவைகளை எல்லாம்கூறிப் பின் செல்லுதற்குக் காலமிலதாயிற்று, என்னை அதன் பின் அரைக் கணம் காணின் அவர் சிறை செய்திருப்பார். பின்பு

தாங்கள் என்னைக் குற்றமற்றவன் என்று துணிவது; நாகனார் இளவரசியை அப்புறப்படுத்திய பின்பே ஆகும். ஆதலின் யான் அரைக்கணமும் தாமதம் செய்யாது இரவே ஓடினேன். என்னாலாயின நன்மைகளை நம் அரசர் குடிக்குச் செய்தேன். பாண்டிமாதேவிக்குக் காவலாய் என் மனைவியை அமர்த்தினேன். (துயரக் குறியுடன் நிற்கிறான்). குற்றமறியா என் ஆருயிர் மனைவியை நாகனார் படைஞர்கள் அடித்துக் கொன்றனர். எனது அன்பிற்கினியாளை அரசர்க் குழைத்தாளை, யான் எப்பிறப்பில் காண்பேனினி.

இம்மட்டோ?, இக் குற்றமற்றாளைக் கொன்றது பொறாது, பாண்டிமாதேவியார் தாமே மாண்டனள். அரசன் மனைவிக்கு இக்கொடுமையோ நேர்வது! அரசர் குடிக்கு அன்புள்ள சிற்றசர்களெல்லா மிருக்க அவர்கள் இப்பாடு படுவதோ? யான் அரசர் குடிக்கு என்னாலான பணி இயற்றினேன். அரசியவர்களைத் தீங்கது தீண்டாவாறு, இளங்கோவிடம் சேர்த்துளேன். இனி அவரைக் காப்பதோ, அழிப்பதோ உங்கள் கடன், யான் கூறவேண்டியன கூறினேன். இனி மற்றவை உம் கடன். உங்களுக்குத் தக்கதெனத் தோன்றியவாறு செய்வீர். இனி என்னைக் கொல்ல யாராயினும் வருவீர். இனி நான் உயிர் வாழ்தல் வேண்டிலேன்.

சிற்றரசர்களிலோருவன்:—இவர் கூறியது மிகவும் பொருத்தமுடையது.

மற்றொருவன்:—நாம் இனி என் செய்வது? நம்மை நம்பி நாகனாரும் போர்க்கோலம் கொண்டார். அவரை இப்போது கைவிடுதல் தகுமோ?

மற்றோர் சிற்றரசன்:—கைவிடுதலோ தக்கதில்லை? அவரை இப்போதே கோறல் தக்கது.

மற்றோர் சிற்றரசன்:–இங்ஙனம் நடந்தவை தெரிந்தால் நம்மையெல்லாம் இன்றே கொல்வார். அவர் படைமுன் நம்படை நிற்குமோ?

மற்றோர் சிற்றரசன்:–நன்று! இவர் கூறியதெல்லாம் பொருத்தமுடையதே. சோழன் இளங்கோவிடம் நம்மரசியார் உளராயின் இவர் கூறியதெல்லாம் உண்மையாகும். கொலை செய்தாரை நேரே கண்டவரில்லை. மற்ற சான்றுகளினின்றும் நாகனார் கூறிய முடிவும் கொள்ளத்தக்கதே. கண்ணன்மாறனார் கூறிய முடிவும் கொள்ளத்தக்கதே.

கண்ணன்மாறனார்:— ஐய! யான் கொலை செய்தேனல்லனென்று தாங்கள், கொல்லாவிடினும் இப்போர்க்கோலத்திற்கு யானே காரணம். அரசியாருக்கு யான் உயிர் விடாது அங்கும் போவேன்.

ஓர் சிற்றரசன்:—ஐய! நாங்கள், தங்களைக் கொலைசெய்யோம். நீங்கள் திரும்பிப்போகலாம்.

மற்றோர் சிற்றரசன்:— இனி நாம் செய்யவேண்டியதைக் கருதுவோம்.

மற்றோர் சிற்றரசன்:— இளவரசியார் இளங்கோவிடமிருப்பதை அறிதற்கில்லை. நாளைக் காலை போர்க்கெழுவேண்

டும். அரசியார் போர்த்தொழில் பயின்றவர். இளங்கோவிடம் அவர் இருந்தால், அவர் போர்க் கெழாது இரார். அவரை நாம் போர்க்களத்துக் காணில் நாம் யாவரும் படையுடன் சோழனிடம் சேர்ந்து கொள்வோம்; இதுவே நம்மை ஏமாற்றிய நாகனை நாம் ஏமாற்றத்தக்க வழி.

மற்ற சிற்றரசர்கள்:—அதுவே தக்கது; அதுவே தக்கது.

கண்ணன்மாறனர்:—ஐய! இளங்கோ, அரசியாரைப் போர்க் கழைத்துச் செல்லத்துணிந்துளார். நாளையே நீங்கள் அவரைப் போரில் காண்பீர். என்னை இனியாவது தங்களுடன் சேர்த்துக்கொள்ளவேண்டுகிறேன். இன்னும் யான் தங்களின் வேறாகக் கருதாதிருக்க வேண்டுகிறேன்.

ஓர் சிற்றரசன்:—ஐய! இதுபெருந்தவறாகும். தங்களை நாகனர் காணில் கொல்லாதுவிடார். (துன்பக் குரலுடன்) நாங்களெல்லாம் ஏமாற்றப்பட்டோம். நீரே அரசர் குடிக்கு உண்மையாய் உழைத்தவர். நீர் இன்னும் அரசியார்க்கு அருகிருந்து யாதொரு தீங்கும் அவரைத் தீண்டாதவாறு காத்தளிப்பீர். நீர் என்னுடன் வருவீர். காவேரிக்கப்பால் உம்மை விட்டு வருவேன்.

[இருவரும் போய்விடுகிறார்கள்]

# போர் நிகழ்ந்துழிப் பொருந்திய வஞ்சனை

## XIX

[உறந்தைப் போர்க்களம், சோழனாரின் படையும் நாகனாரின் படையும் கைகலந்து போர் செய்கின்றன; நாகனார் தன் இடத்திருக்கிறார்]

நாகனார்:— (ஒரு சேவகனை நோக்கி) அடே! ... மரத்தி லேறிப்பார். [ஓர் படைஞன் மரத்திலேற ஓடுகிறான். நாகனார் கச்சை மாற்றியணிகிறார்.]

ஏ இக்கச்சை என்னுடையதல்ல. என் கச்சை எங்கே? ஏன் வேறொருவர் அணிவதை என்னிடம் கொடுத்தாய்? [ஓர் படைஞன் அதை வாங்கி அணிகிறான்.]

நாகனார்:—இன்னும் மரத்திலேறிப் பார்த்தவன் வர வில்லையா? ... பார்த்தானா? இல்லையா? ... சோம் பேறிகள்.... சுறுசுறுப்பற்றவர்கள். இதைப் பார்த்துவர இன்னும் நேரமா? இவர்கள் உபயோகமற்றவர்கள்.

[ஓர் தலைவன் ஓடிவருகிறான்]

தலைவன்:— பாண்டியன் மகளார், போர்க்குவந்துள்ளார்.

நாகனார்:—ஆ! பெண் பிள்ளையா, போர் செய்ய வந்தாள், நீ நன்றாகப் பார்த்தனையா? பொய் கூறுகின்றாய்.

தலைவன்:—இல்லை; இல்லை; யான் நேரே பார்த்தேன்; இளவரசியும் போர்க்கோலம் பூண்டு இளவரசர்க்கு அவரே தேரோட்டி வந்தார்; நான் பார்த்தேன்.

[மற்றோர் தலைவன் ஓடிவருகிறான்]

ஐயோ! வஞ்சனை! வஞ்சனை! பாண்டிய நாட்டுச் சிற்றரசர்கள் சோழனிடம்போய்ச் சேர்ந்துகொண்டார்கள். நம் படை தோற்றது, நம் படைஞர்கள் எல்லாம் ஓடுகின்றனர்.

நாகனார்:—ஆ! கொண்டுவா வாளை ... கொண்டுவா வாளை ... (வாளை இடுப்பில் கட்டிக் கொண்டே அணிகிறார். அது அணியுமிடம் தவறியதால் கீழே விழுகிறது. அவ்வாளைக் கையிலெடுத்துக் கொள்ளுகிறார்.) நான் இவர்களை நம்பியே போர்க்கோலம் கொண்டேன். இன்னும் எத்தனை படைவரினும் யானொருவனே வெல்வேன் தலைவா! நீ முன் சென்று, ஓடும் படைகளை நிறுத்து. யான் இதோ வந்துவிட்டேன்.

(இருவரும் ஓடுகிறார்கள்)

## காதலர் இறுதியும் காதலின் வெற்றியும்

## XX

[படைக் களத்தின் மற்றோர் பாகம்; பங்கயச் செல்வி ஓரிடத்தில் தேருடன் காத்திருக்கின்றாள்; சோழன் இளங்கோ வெற்றியோடு வருகிறான்; செல்வி தேரினின்று இறங்கி ஓடி வருகிறாள்.]

பங்கயச் செல்வி:— *நாதா! தங்கள் வருகை முருகவேளின் வெற்றிசேர் வருகையைப் போன்றது. தங்கள் நடையும் தோற்றமுமே வெற்றியை யுணர்த்தும்.*

[இளங்கோவை முத்தமிடுகிறாள்]

இளங்கோ:—*யான் வெற்றி பெற்றது உன் விளங்கிடும் முகத்தால். முருகவேள் வெற்றிபெற்ற பின் இம் முத்தம் பெற்றிலன். முத்தம் பெற்றிலர் வெற்றியும் வெற்றியோ? யான் வெற்றியும் பெற்றேன், முத்தமும் பெற்றேன். உனக்குத் துன்பம் விளைத்த நாகனரை, நம் படைஞர்கள் இதோ கட்டிக்கொண்டு வருகின்றனர். உனக்குத் தீமை விளைத்த அந்நாகனர் நெஞ்சை உன் முன்பே பிளக்கின்றேன்.*

[நாகனரைக் கட்டிக்கொண்டு வருகிறார்கள்]

இளங்கோ:— *நீரோ நாகனர்? எம் படைஞர்தம் வாள் உமக்கு இன்சுவை தந்ததே போலும்.*

நாகனர்:—*சில மாதங்களுக்கு முன் என் படையாளரின் வாள் உமக்கு இனிமை தந்திருப்பின் உம் படைஞர்*

வாளும் எனக்கு இனிமை தரும். இவ்வற்ப வெற்றியைப் பற்றி உமக்கு இவ்வளவு கர்வமோ? நேற்றுத் தோற்றோடியதை மறந்தீரோ?

இளங்கோ:—பிறர் பொருள்வவ்விய உமக்குமோர் பேச்சோ? அறமுறை துறந்த அற்பனுகினீர்.

(படையாளர்களை நோக்கி) கொண்டுவா இங்கு, தீங்கு நினைத்த அந்நெஞ்சை இவ்வாளாற் பிளப்பேன்.

நாகனூர்:—(இளங்கோவை நோக்கி நகைக்கிறார்) ஓஹோ! யார் பொருள் வவ்வினேன்? எங்கள் கம்பணன் வென்றதும் இந்நாடு; எங்கள் நரசயன் வென்றதும் இந்நாடு; அவர் அப்பால் சென்றபின் பாண்டியர் அவர் வென்ற நாட்டினைக் கவர்ந்தனர். அதனை யான் மீண்டும் அடைய உரிமையுண்டென்பதை அறிவீர்.

இளங்கோ:—என் காதலியைக் கவர நினைத்தது, உம் கள்ள நெஞ்சன்றோ! அந்நெஞ்சை இவ்வாளால் பிளப்பேன்; யார் யாருக்கு இந்நெஞ்சு என்னென்ன தீமைகள் நினைத்ததோ? கொண்டுவா அவரை; [படைஞர்கள் கொண்டுவருகிறார்கள்;] இத்தீய நெஞ்சைப் பிளப்பேன்.

நாகனூர்:—[நகைத்து] யான் சாவதற்கு அஞ்சினேன் என்றோ நினைத்தீர்? ஆயுதமற்ற என்னைக் கொல்வதோ வீரம்? நீர் வீரனுகின் என்னுடன் போர் புரிந்து என்னைக் கொல்வீர். சோழனார் வழியில் ... தோன்றினீர் இல்லை போலும்; மனுமுறை கண்டார் வழித்தோன்றலின் செயலோ இது!

இளங்கோ:—[சற்றுத்திகைத்து நிற்கிறார்.] ஆ! உண்மை ... உண்மை. வெற்றி மயக்கால் அறமுறை மறந்தேன் ஆ! ஆயுதமற்றவன் மேல் உருவிய இவ்வாள், என் வீரம் பழிப்பது. இதனை உறையினிற் கொள்ளேன் (கீழே விட்டெறிகிறான்) நன்று இன்று போய் நாளை வருக. உம் படையுடன் வருகினும் வருக. உம் வாளுடன் வருகினும் வருக. போரினில் உம் உரம் கலக்கி உம்முயிர் குடிப்பேன். படைஞர்காள்! விடுவீர். அவரைத் தொடாதீர். போவீர் அப்பால்.

[படைஞர்கள் விட்டு விட்டேக, நாகனார் போகிறார்]

பங்கயச்செல்வி:— நாதா! வீரர் தம் வீர! ! இன்றே தங்கள் வீரம் சிறந்தது. இவ்வுலகோர் பெறும் புகழ் இதனிற் சிறந்ததுமுளதோ? தங்களைப் பெற்ற என்னிற் சிறந்த கன்னியருண்டோ?

இளங்கோ:—உன் முத்தமே தந்தது இத்திறம் யாவும்.

[முத்தமிடுகிறான்]

பங்கயச்செல்வி:—என் முத்தமென்ன இத்தனை உயர்ந்ததோ? எத்தனையாயினும் நித்தமும் தருவேன்.

[தழுவி முத்தமிடுகிறாள்.]

[மறைவிடத்திருந்து ஓர் அம்பு இளங்கோ மீது மருமத்தில் தைக்கிறது. இளங்கோ அலறிக் கீழே விழுகிறான். பங்கயச்செல்வி அவனை வாரி எடுக்கிறாள். அழுகிறாள். தவிக்கிறாள், தன் மடிமீது சாத்திக் கொள்ளுகிறாள்.]

ஐயோ! ஐயோ!! இது யார் செய் வஞ்சமோ! இது யார் சூழ்ச்சியோ ... ஐயோ! ஐயோ!! ... அவர் வீரச்செயலுக்கு ஏற்குமோ இம் முடிவு ... இப்பொல்லாவுலகில் நல்லவைசெய்தலோ பொருந்தும்! ஆ! என் செய்வேன்! ... என் செய்வேன்! நல்லன செய்தலால் என் நாதனை இழந்தேன் ...... அல்லவை செய்வார் அழியாது வாழ்வர்! — ஆ! ஆ! பொல்லா வுலகே நீ ஒழியும் நாள் என்ளுள்! ...... (அழுகிருள்)

உலகை நோவதேன்? உற்ருரை நோவதேன்? (அழுகிருள்) நான் பெரும் பாவி. ...... நான் பெரும் பாவி! என் நாதனைக் கொன்றது நானே ... நானே! ஆ! என் தந்தையைக் கொன்றேன் ... தாயைக் கொன்றேன். ...... என் நாதனைச் சேர்ந்தேன். ...... அவரையும் கொன்றேன் ....... என்னில் கொடியார் உண்டோ .... உண்டோ? இப்பொல்லாவுலகோ, உலகின்கொடுமையோ இவரைக் கொன்றது? இல்லை.... இல்லை ... நானே கொன்றேன். ஆ! பாவியேன்.

என்னலன்ருே இப்போர் விளைந்தது; இப்போரிலை யெனின் என் நாதனு மிறவார்.

ஆ! என் நாதா! உயிர் துடிக்கிறதே — துடிக்கிறதே — ஐயோ! கண்கள் சுற்றின — ஐயோ உயிர் போகுமோ!

[தலையிலடித்துக் கொள்கிருள்] நான் என் செய்வேன்! ஐயோ நான் என் செய்வேன்! — நாதா! இன்னுமோர் முறை என்னைப் பார்ப்பீர். ஆ!

கண்கள் மூடிவிட்டன — கண்கள் மூடின — நாதா! ஓர் முறை பாரீர் — ஓர் தரம் பாரீர் — நாதா! நாதா! வாய்திறந்து ஓர் மொழி கூறுவீர். ஐயோ கண்கள் விழிக்கவில்லையே! வாய் பேசவில்லையே! உடலெல்லாம் சூடு குறைந்ததே. என் நாதா! ஆ! நான் என் செய்வேன் என் முகத்தைப் பாரீர். நாதா! ஏழைபடும் கண்கலக்கம் பார்ப்பீர். நாதா! வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்வீர்!

இளங்கோ:—[சற்றுப் புறளுகிறான்] — செல்வம்! —

பங்கயச் செல்வி:—நாதா! நான் அருகே யிருக்கின்றேன். தங்களை விட்டு நான் அகலேன்.

[இளங்கோ சற்றுத் தெளிந்து, கண்களை விழிக்கிறான் கைகளை யுயர்த்திப் பங்கயச் செல்வியின் கழுத்தினில் கோத்து முத்தமிடுகிறான். கைகள் சோர்ந்து கீழே விழுகின்றன. உயிர் போய் விடுகிறது].

பங்கயச் செல்வி:—[அழுகிறாள்; முகத்தி லடித்துக் கொள்கிறாள்; தலையில் அடித்துக் கொள்கிறாள்..............] ஐயோ! ஆ! ஐயோ! உயிர்போய் விட்டதே!—உயிர் போய்விட்டதே!— எப்படிப் பொறுப்பேன்— எப்படிப் பொறுப்பேன் நாதா! இப்படி நான் தவிக்கத் தாங்கள் எப்படி மனந்துணிந்தீர். நான் அழுதால் வருந்தினீர். நான் அலறித் தவிப்பதை எப்படிப் பொறுத்தீர்!... எபபடிப் பொறுத்தீர்! ... எப்படிப் பொறுத்தீர் ... என் நாதா! என்னை இன்னுமோர் முறை பாரீர் .... ஒரே முறை பாரீர் ... இன்னும் ஓர்

முறை வாய் திறவீர் ... ஓரே வார்த்தை சொல்வீர் நாதா! என் நாதா! ஆ என் நாதா! நாதா!! இன்னும் ஓர் முறை முத்தம் கொடுப்பீர் ... [முத்தமிடுகிறாள்] எம்போல் பாவிகள் யாருமில்லை. இன்னும் யானிருப்பின் யார் யாரைக் கொல்லேனோ? தாயுமிறந்தாள்; தகப்பனுமிறந்தார்; நீரும் இறந்தீர். எனக்கு இவ்வுலகில் யாருளார்? நானும் உம்முடன்வருவேன்... நானும் உம்முடன் வருவேன். [எழுந்து கீழே கிடந்த வாளை யெடுக்கிறாள், அதனையோங்கிக்குத்திக்கொள்ளப் போகும் போது வல்லபன் பிடித்துக்கொள்ளுகிறான்.]

வல்லபன்:—அம்மா! என்னசெய்யத் துணிந்தீர்! இதற்கோ நான் பட்டபாடுகள் [வாளை அவள் கையிலிருந்து பிடுங்கி யெறிகிறான்.] நாகனார், ஓடும்பொழுது நம் படைஞர்கள் அவரைப் பிடித்துக்கொண்டார்கள். அவர் தானே வெட்டிக்கொண்டு இறந்தார். இந்த நற் செய்தியை நான் கூற வந்தபோது இச்செய்கையைத் தாங்கள் செய்யத் துணிவதோ?

பங்கயச்செல்வி:—(அழுகையோடு) அவன் இனி இறக்கிலென், வாழிலென். அண்ணா! அதோ பார் என் நாதர் இறந்தார் (அழுகிறாள்) நான் எப்படிப் பொறுப்பேன்! எப்படிப் பொறுப்பேன்! நான் எதற்காக உயிர் வாழவேண்டும்?

வல்லபன்:— [பங்கயச் செல்வியை விட்டு விட்டு இளங்கோவிட மோடுகிறான்... முகத்தில் அறைந்துகொள்ளுகிறான்; அழுகிறான்] வெற்றி விளைவு அவலமாய் விட்

டதே! எங்கள் முயற்சியெல்லாம் வீணாயிற்றே! ஆ! [பங்கயச்செல்வியைப்பார்த்து அழுகுரலோடு] அம்மா! எப்படி இறந்தார்? யார் கொன்றது?

பங்கயச்செல்வி:—யார் கொன்றால் என்ன? மறைவிடத்தி லிருந்து எவனோ எய்தான். யார் எய்தாலென்ன? நாதர் மாண்டார்; என் நாதர் மாண்டார்! மீண்டும் யான் அவரைப் பெறுவேனோ? பாவியேன். நான் ஏன் இனி உயிர் வாழ்வது? என்னால் இனி யாருக்குப் பயன். நானிருந்தால் இன்னும் யார் யாருக்குத் தீமைகள் நேருமோ! நன்மையேசெய்த உன் அன்னைக்கு நேர்ந்ததைப்போல் என்னால் உனக்கும் தீமைகள் நேரும். உன் தந்தைக்கும் தீமைகள் நேரும்.

[வல்லபனிடத்து மண்டியிட்டு]—அண்ணா! என்னை விட்டுவிடு; என்நாதரோடு நானுமிறக்கிறேன். அண்ணா வேண்டாம் — வேண்டாம்!! என்னை விட்டுவிடு. இதுவே இனி யான்பெறும் புண்ணியம்.

வல்லபன்:—[அழுகிறான்] இதற்கோ யான் என் அன்னையை இழந்தது. என் அன்னை இறந்தபிறகு தாங்களே என் அன்னையென்றிருந்தேன். இல்லாவிடில் என் அன்னை யிறந்தபோது யானு மிறந்திருப்பேன், எல்லோரது அன்னையும் என் அன்னைபோலாவரோ. (அழுகிறான்) குற்றம் ஒன்று செய்தறியாள்...வெள்ளை உள்ளத்தாள். கள்ளமறியாள்; என் அன்னையையிழந்தபின் தாங்களை என் அன்னை யென்றிருந்தேன். தாங்களு மிறப்பின் யான் எதற்கு உயிர் வாழ்வது. தாங்கள் இறக்குமுன்

## பிறர்பின் நிகழ்ச்சி பேசியமுடிவுரை

பங்கயச்செல்வி, தன் கணவனை அடைய, மேற்கூறியாங்கு உயிர் நீத்தலோடு இக்கூத்து முடிவுறும். ஆனால் சிலர் இதனை ஆற்றாது வல்லபனும் மாண்டான் என்பர். அவனிறந்ததைக் கேட்ட அவன் தந்தை இவ்வுலகவாழ்வை வெறுத்து உயிர் நீத்தனன் என்பர், மற்றுஞ் சிலர். சோழன் இளங்கோவின் தந்தை, ஆங்குத் தோன்றி இவர்கள் திறத்தை வியந்து,

தென்றமிழ்ப் பாவை, தெய்வக் கற்பினள்,
காதலிற் சிறந்தாள், கற்பினில் உயர்ந்தாள்,
துக்க வெறியால் இக்கதி அடைந்தாள்.
வீரக் காதல் விளங்கிய மகளையும்
வீரர் பெருமை விளக்கிய மகனையும்
என்றினிப் பெறுவேன்! என்றினிப் பெறுவேன்!
என ஏங்கி—
பகைப்புலக் காதல் பற்றுதல் தவிர்வீர்
பகைப்புலக் காதல் பாழ்பட் டழியும்
பெற்றோர்க் கடங்கா மக்களும் பாழே
ஆளுந் திறமிலா அரசனும் பாழே

என, அறவுரைகூறித் தானும் உயிர் துறப்பான் எழுந்தனன். அப்போது போர்த்தெய்வமும் பத்தினித் தெய்வமும் அவன் முன் தோன்றி, அவனைத் தேற்ற

இறந்தோர் யாவரையும் உயிர்பெறச் செய்தன. செல்வியும் செல்வனும் தெய்வத்தன்மை பெற்று யாவரும் கண்டு வியக்க, ஒருவரை ஒருவர் தழுவியாங்குத் துறக்கம் எய்தினர் அரசன் சோழன் அச்செல்விக்குக் கற்சிலை எடுத்தனன். தன் நாட்டில் பல ஊர்களிலும் கோட்டம் வகுத்து விழாவெடுத்தனன். வல்லபன் பாண்டிய நாடடைந்து அச்செல்விக்கு அவள் விட்டகன்ற பாண்டியன் அரண்மனை வடக்கு வாயிலில் கோட்டம் வகுத்துக் கற்சிலைநிறுவி விழா வெடுத்தனன் என்பர். இவ்விரு நாடுகளிலும் இச்செல்வியையே, "செல்வத்தம்மை," "செல்லத்தம்மன்" "செல்வி", "செல்வி" "செல்லாயி" எனப் பலரும் போற்றி இன்னும் தொழுவர்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8. | 24, 25. | படைபோர்க்கும் | படையோர்க்கும் |
| 9. | 5. | எம்மைக் காப்பாளர். | எம் மெய் காப் பாளர். |
| 18. | 16. | இவனை | இவளை |
| 21. | 14. | லே பல | லோபல |
| 22. | 14. | விடகூடாது | விடகூடது |
| 61. | 25. | புத்திரி | புத்தி |
| 70. | 3. | அதீதி; | அதீத |
| 79. | 7. | இப்பபடுங்க | இப்பப்படுங்க |
| 127. | 13. | யிருக்கக் | இருக்கக் |